# லட்சுமி

பி. ஸ்ரீ.



அமுத நிலயம்

A. No. 18556

# லட்சுமி

(வரலாறும் வழிபாடும்)




*

பி. ஸ்ரீ.

*

அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்
ம்பேட்டை :: சென்னை-18

அமுதம் (மலிவு)—50
முதற் பதிப்பு செப்டம்பர், 1960
உரிமை பதிவு

விலை 30 காசு] [கிளேஸ் பதிப்பு விலை ரூ. 1—2




## பொருளடக்கம்



நேஷனல் ஆர்ட் பிரஸ், தேனாம்பேட்டை, சென்னை-18.

# லட்சுமி

## 1. வியாசர் கனவு

ஒரு பெரிய கோவிலில் திருவிழா வெகு விமரிசையாக நடைபெறுகின்றது. ஆயிரக் கணக்கான மக்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். எத்தனை விதமான தீவர்த்திகள், மத்தாப்பு வாணவேடிக்கைகள், கண்கவரும் காட்சிகள்! எத்தனை விதமான கீதவாத்திய விநோதங்கள்! விழா கண்ணுக்கு விருந்தாக இருப்பது போல் செவிக்கும் விருந்தாக இருக்கிறது.

திருவிழாவிற்கு நாட்டுப்புறத்திலிருந்து இரண்டு நண்பர்கள் வருகிறார்கள். இவர்களில் ஒருவன் மற்றவனிடம் உரத்த குரலில், 'அண்ணே, என்ன திருவிழா! மேளமும் தாளமும் நாகசுரமும் வேறு பல வாத்தியங்களும் ஒலித்துக்கொண்டே யிருக்கின்றன. வெடிகளும் வெடித்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் ஒரே இருட்டாக இருக்கிறது! விழா என்றால் வெளிச்சம் வேண்டாமா?' என்று சொல்லுகிறான்.

மற்றவனோ, 'தம்பி, வெளிச்சத்திற்கு என்ன குறைவு? தீவர்த்தி வெளிச்சம் மட்டுமா? மத்தாப்பு வெளிச்சமும் வாணங்களின் வர்ண ஒளிகளும் எவ்வளவு அற்புதமாக இருக்கின்றன! ஆனால் இந்த ஒளி விசித்திரங்களோடு, இத்தனை கீத வாத்தியங்களும் ஒலி செய்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்! இவை எப்பொழுது ஒலி செய்யும்? நாகசுரத்தை ஊதப்பார்க்கிறான்; ஆனால் இன்னும் ஊதவில்லை, மேளத்தின் மேல் கோலை வைத்து வைத்து எடுக்கிறான்; எப்பொழுது அடிக்கப் போகிறான்!' என்று மெள்ளப் பேசுகிறான்.

இவ்வாறு திருவிழாவை அனுபவிக்கும் நண்பர்களில் ஒருவன் குருடன், மற்றவன் செவிடன் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

### உலகம் ஓர் அழகுத் திருவிழா

கண்கள் இருந்தும் இவ்வுலகிலுள்ள அழகுகளுக்குக் குருடாக இருப்பவர் உண்டு. காதுகள் இருந்தும் சங்கீத உலகத்திற்கும் கவிதை உலகத்திற்கும் செவிடாக இருப்பவர் பலரன்றோ?

இயற்கையழகுகளுக்கு ஓர் எல்லை இல்லை. 'அழகே! நீ ஒன்று; நீ பல. உள்ளதும் நீ; இல்லாததும் நீ. அமுதமும் நஞ்சும் நீ. காதலும் சாதலும் நீ. இன்பமும் துன்பமும் நீ!' என்று இவ்வாறு தத்துவ

சாஸ்திரிகள் முறையிடுகிறார்கள். எனினும் அழகுத் தெய்வத்தை உபாசிப்பவர் அழகுக் கலைஞரே (Artists) யாவர். இக்கலைஞர்களிலும் கவிஞன் அழகுத் தெய்வத்தை விசேஷமாக ஆராதிப்பவன், அழகுக் கலைஞர் உள்ளமே அழகுத் தெய்வத்தின் கோயில்; கவிஞர் உள்ளத்திலே அழகுத் தெய்வம் முழு மாட்சியுடன் கொலு விற்றிருக்கிறது.

அழகுத் தெய்வத்தின் அழகுக் கூத்தை—அழகுத் திருவிழாவை—அப்படியே தரிசிக்கும் கண் கவிஞனுக்குத்தான் உண்டு. அத் தெய்வத்தின் வீணா கானத்தையும் தாள பேதங்களையும் கேட்கும் செவியும் அவனுக்குத்தான் உண்டு.

## அழகுத் தெய்வம்

தமிழ் 'திரு' என்ற சொல்லால் அழகை விசேஷமாகக் குறிப்பிடுவதுண்டு. ஒருவன் ஒரு பொருளைப் பார்க்கிறான். அதைப் பார்க்கிலும் சிறந்த 'உருவும் நலனும் ஒளியும்' எந்த வகையிலும் வேறொரு பொருளுக்கு இல்லையென்று நினைக்கிறான். அந்நிலையில், தான் கண்ட பொருளின் மேல் அவனுக்கு விருப்பம் செல்கிறது. இத்தகைய் விருப்பத்தோடு கூடிய அழகைத்தான் தமிழர் 'திரு' என்று கூறுவர். 'எல்லாராலும் விரும்பப்பட்ட அழகு அவட்கு (அழகுத் தெய்வத்திற்கு) உண்டாகையாலே திருமகள் என்று பெயராயிற்று' என்பது பேராசிரியர் உரை.

அழகுத் தெய்வமாகிய திருமகளைப் பெண்மையின் பேரொளி-வனப்பிலே கவிஞர்களும் பௌராணிகர்களும் கண்டு வழிப்பட்டனர் என்பதில் வியப்பு ஒன்றும் இல்லை. பாரதியார் தாம் போற்றிய அழகுத் தெய்வத்தைப் பின் வருமாறு வருணிக்கிறார்:

மங்கியதோர் நிலவினிலே
    கனவில் இது கண்டேன்;
வயது பதி னாறிருக்கும்,
    இளவயது மங்கை;
பொங்கிவரும் பெருநிலவு
    போன்றஒளி முகமும்
புன்னகையின் புதுநிலவும்
    போற்றவரும் தோற்றம்;
துங்கமணி மின்போலும்
    வடிவத்தாள் வந்து,
'தூங்காதே, எழுந்தென்னைப்
    பார்' என்று சொன்னாள்;
அங்கதனில் கண்விழித்தேன்;
    அடடா! ஓ! அடடா!
அழகென்னும் தெய்வந்தான்
    அதுஎன்றே அறிந்தேன்.

இது புதுமைக் கவிஞர் கண்ட கனவு. பழைய உலகில் கவிஞராகவும் பௌராணிகராகவும் ஒருங்கே விளங்கிய வியாச முனிவரும் அழகுத் தெய்வத்தைக் குறித்து ஒரு கனவு கண்டார்.

### வியாசர் கனவு கண்டது

'வர்ணக் களஞ்சியமான இவ்வுலகிலே, அழகுகளெல்லாம்—இன்பங்களெல்லாம்—செல்வங்களெல்லாம் ஓர் உருவமாகச் சமைந்த தெய்வம் ஒன்று (An ultimate Beauty) இருக்க வேண்டுமல்லவா? அத்தகைய அழகுத் தெய்வத்தை அல்லது திருமகளை ஒருவன் பாராததால் இல்லை யென்று சொல்லிவிடலாமா? அழகைப்பார்த்து அனுபவியாதவர் அழகேயில்லை யென்று மறுத்தல் கூடுமா? அழகுத் தெய்வமே! எத்தனை காலமாகக் கவிஞர்களும் பௌராணிகர்களுமாகிய நாங்கள் உன்னைத் தேடித் தவிக்கிறோம்!

'அழகே, நீ யார்? எங்களைச் சூழ நிற்கும் சிருஷ்டியாகிய அற்புதத்தைத் தாங்கும் தூணோ? அல்லது உலகின் அதி சூட்சும சக்திகளில் ஒன்றோ? அழகே! நீயோ உலகின் உயிர்? உண்மைப் பொருளும் நீதானோ? வாழ்க்கையிருளில் ஒளி காட்டி வழிகாட்டும் மணி விளக்கும் நீயோ? அழகே! நீயோ உலகின் தாய்? நீயோ உலகின் தெய்வ நாயகி? உன்னை அறிந்துகொள்ளும் பொருட்டு நான் எவ்வளவு காலமாகத் தவம் கிடக்கிறேன்!

'அழகே! நீ எப்போது தோன்றினாய்? உன்னை யாவர் படைத்தனர்? அழகே! நீ எவ்வளவு உண்மையாக இருக்கிறாய்! எனினும் உன்னை நாங்கள் கண்டுகொள்ள முடியாமல் இருக்கிறோம்.'

இவ்வாறு வியாசர் தனியாக இருந்து எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறார். மேற்றிசையில் அஸ்தமன சூரியன் தன் வாணவேடிக்கைகளைக் காட்டி மறைந்துவிடுகிறான். இப்பொழுது எங்கும் ஒரே மத்தாப்பு வெளிச்சம்! 'இதுவோ அழகுத் தெய்வத்தின் மேனி ஒளி!' என்று வியாசர் நினைக்கிறார். அவர் உள்ளத்தில் இன்னதென்று சொல்ல முடியாத மகிழ்ச்சி உண்டாகிறது.

அந்தி மயங்குகிறது. மேற்றிசை வானத்தில் ஒளியை இருள் விழுங்குவதற்குள், கீழ் வானத்திலே கடலிலிருந்து ஓர் அமிர்த கலசம் எழுவது போல் பூர்ண சந்திரன் உதயமாகிறது. கடல் உற்சாகமாகத் தன் அலைக் கைகளைக் கொட்டி அழகுமயமான சந்திரனை வரவேற்கிறது. வியாசர் உள்ளத்திலும் மகிழ்ச்சி கடல் போலப் பொங்குகிறது.

சந்திரன் வானவீதியில் தவழ்கிறது. கண்ணையும் நெஞ்சையும் மயக்கும் சந்திரிகை கடலோடு கொஞ்சுகிறது. பால்போல் நிலா. கடலும் சந்திரிகையும் ஒரே பாற்கடலாகக் காண்கின்றன! ஆ, ஆ! இந்த நிலாவோடு அமிர்தமும் கலக்கிறது. அலைகள் 'ஓ' என்று இரைந்து கரையில் மோதி மோதி மடிந்து விழுகின்றன. அந்த

ஓசையைக் கேட்டுக்கொண்டே, அந்தக் காட்சியின்பத்தைப் பருகிக் கொண்டே, வியாசர் தியானத்திலே மெள்ள மெள்ள மூழ்குகிருர்.

இப்பொழுது இவர் பாற்கடல்மீது சந்திரனும் அமிர்தமும் எழுவதைக் காண்கிருர். என்ன அழகு விழா! என்ன மோகனக் காட்சி! அக்காட்சியில் இவர் தம்மை முழுக்க இழந்துவிடுகிருர். கடற்காற்று இவர் காதில் ஏதோ இரகசியம் பேசிச் செல்லுகிறது. என்ன அமைதி! என்ன தெளிவு! இப்பொழுது கட்டழகி ஒருத்தி இன்பம் நிறைந்த உள்ளத்தோடு நகை தந்து ஆசை முகம் காட்டுவது போலச் சந்திரன் காட்சி அளிக்கிறது. 'இதுவோ அழகுத் தெய்வத்தின் ஜோதி முகம்!' என்று வியாசர் ஆச்சரியம் அடைகிருர்.

'அழகுக் கடலாகிய இப்பாற்கடலிலிருந்துதான் இத்திருமகளும் உதயம் செய்கிருள். அமுதோடு பிறந்த இத் திரு, அமுதினும் இனியள்! என்ன ரூபம்! என்ன காந்தி! பாற்கடல்மீது தேவியின் திருமேனிச் சோபை ஒரு சோதி வெள்ளமாகப் பொங்குகிறது!' என்று சிந்திக்கிருர். வியாசர் நனவை மறந்துவிடுகிருர். இயற்கையின் அகண்ட உணர்ச்சி இவரை விழுங்கிவிடுகிறது.

என்ன அற்புதக் காட்சி! திருமகளின் திருமுகம் பூர்ண சந்திரனைப் போல் விளங்குகிறது. கண்களோ 'கடலினும் பெரிய கண்கள்!' அவள் ஒருகால் தன் இயற்கைப் பொற் சிங்காதனமாகிய செந்தாமரை மலர்மீது ஒரு பொன்னங்கொடியெனப் பொலிந்து தோன்றுகிருள். ஒருகால் மின்னற்கொடிபோல் மின்னுகிருள். ஒருகால் அவள் மேனி நவரத்தினம்போல் ஜொலிக்கிறது. கணந்தோறும் புதிய புதிய அழகு, புதிய-புதிய ஒளி! அந்தேக காந்தி திக்கெல்லாம் நிறைகின்றது. தேவியின் மலர்க்கரங்களில் பல்வகைச் செல்வங்களும் காணப்படுகின்றன. வியாசர் பேராச்சரியம் அடைகிருர்.

கங்கை முதலான மகாநதிகள் தேவியை நீராட்டுவதற்குத் தூய நன்னீர் கொண்டு வருகின்றன. எட்டுத் திக்கிலுமுள்ள யானைகள் வந்து, நவரத்தினம் இழைத்த தங்கக் கலசங்களில் நதிகள் கொண்டு வந்த தீர்த்தங்களை எடுத்துத் தேவிக்கு அபிஷேகம் செய்கின்றன. அப்பொழுது மகரிஷிகள் கடல் முழக்கம் போல் வேத கோஷம் செய்கிருர்கள். சித்தர்கள் பல்லாண்டு பாடுகிருர்கள். கந்தர்வர்கள் யாழ்கொண்டு அமுத கீதம் பாடுகிருர்கள். தேவமாதர்கள் தோகை விரித்தாடும் மயில்களைப் போல் களிப்போடு நடனம் செய்கிருர்கள். மூவுலகங்களிலுமுள்ள பெரியோர்களெல்லாம், 'தாயே! மகாலட்சுமியே! அருள் செய்வாய்!' என்று தோத்திரம் செய்கிருர்கள். வியாசரும் அக் கூட்டத்திலே கலந்துகொண்டு அழகுத் தெய்வத்தை வாயார மனமார வாழ்த்துகிருர்.

படைப்புக் கடவுள் திவ்யமான ஆபரணங்களை வழங்குகிருன். பூமிதேவி பரிமள வஸ்துக்களைக் கொண்டு வந்து கொடுக்கிருள். நீலவானம் ஓர் அரிய சித்திரப் பொற்பட்டாடை உதவுகிறது. கலை

மகள் நட்சத்திரங்களையே ஒரு வயிரமணி மாலையாகக் கோத்துத் திருமகளுக்கு அணிந்து மகிழ்கிருள். முக்காலங்களிலுமுள்ள கவிஞர் களும் ஓர் அற்புதமான கவிக் கிரீடம் புனைந்து தருகிருர்கள். வியாசர் அக்கிரீடத்தை வாங்கி அழகுத் தெய்வத்திற்கு அளிக்கிருர்.

இவ்விதமாக அவரவர் அன்பு கூர்ந்து செய்த பணிவிடைகளைத் திருவுளம் பற்றி, அழகுத் தேவி தன்னை அலங்கரித்து முடி சூடிக் கொள்கிருள். அப்பொழுது தேவர்கள் பூமழை பொழிகிருர்கள். மேகங்கள் பொன்மழை பொழிகின்றன. கடல்களெல்லாம் பல்வேறு இரத்தினங்களைத் தூவி ஆரவாரம் செய்கின்றன. தேவி அதியற்புத அழகு வாய்ந்த சொருபத்தோடு காட்சி தருகிருள்.

### திருமாமகளின் சுயம்வரம்

அழகுத்தேவி தனக்குரிய நாயகனைத் தேடுகிருள்:

தேன்அமர் நீல மாலை
செழுந்தளிர்க் கரத்தின் ஏந்தி
வானவர் தொழுது வாழ்த்த
வரன்தனை நோக்கி னுளால்.

தளிர்க்கையில் கருநெய்தல் மாலையொன்று ஏந்தி, இவள் தனக்கு இசைந்த காதலனை நோக்குகிருள். தேவர்கள், அரசர்கள், சித்தர் கள், கந்தர்வர்கள், முனிவர்கள் கைகூப்பித் தொழுது வாழ்த்து கிருர்கள்.

பரிபூர்ண குண சௌந்தரியம் பெற்றவன் புருஷோத்தமனுகிய திருமாலே யென்றும், அவனே தனது நாயகன் ஆவானென்றும் துணிகிருள். உடனே அவள் தன் கையிலிருந்த மங்களகரமான நீல மலர்மாலையை மரகத மலைபோலக் காட்சி தரும் மகாவிஷ்ணு வின் தோளிலே அணிந்து இளநகை அரும்புகிருள். அப்பொழுது திருமால் அழகுத் தெய்வமும் ஐசுவரியங்களின் அதிதேவதையும் அகில லோக மாதாவுமாகிய மகாலட்சுமியைத் தமது மார்பிலே தரித்துக்கொள்ளுகிருர்.

தேவியும் நீல மேகத்தினிடையே ஒளிரும் மின்னற்கொடி போல் விற்றிருந்து தன் மக்களைக் கடைக் கண்ணுல் நோக்கியருளு கிருள்.

### வியாசர் கதை சொல்லுதல்

வியாசர் தாம் கண்ட அழகிய கனவை ஒரு நல்ல கதையாக் கினுர். அவர் ரஸமாகக் கதை சொல்லுவதில் தேர்ச்சி பெற்றவர். தமது 'லட்சுமி கதை'யில் சிங்காரம், வீரம், ஹாஸ்யம், விநோதம், சோகம் முதலிய ரஸங்களை வேண்டிய அளவிற்குச் சேர்த்தார். தமது சீடர்களும் மற்ற முனிவர்களும், 'இன்னும் கேட்கவேண்டும்! இன்னும் கேட்கவேண்டும்' என்று ஆசைப்படுமாறு கதையை

ஒழுங்கு செய்து உருவாக்கினர். கதை நீண்ட காலமாக இவர் உள்ளத்திலே ஊறிக்கொண்டிருந்தது.

அழகுத் தெய்வத்தின் பிறப்பும் சுயம்வரமும் ஆச்சரியமாக இருந்ததால் ரிஷிகளுக்கு ஆனந்தத்தைத் தந்தன. இவர் தமது கதையைக் குறித்து அவர்களோடு சம்பாஷணை செய்தார். அவர்கள் பல கேள்விகளைக் கேட்டார்கள். இவரும் தக்க விடை கூறினர்.

'உலகநாதனுகிய இறைவனது மார்பகத்திலே இனிது வீற்றிருந்து உயிர்கள் யாவையும்—உலகங்கள் யாவையும்—ஈன்றெடுத்த அழகுத் தெய்வமாகிய ஆதிநாயகியும் ஒரு காலத்திலே பாற்கடலில் பிறந்தவள்தானே?' என்று ஒரு முனிவர் கேட்டார். அப்பொழுது வியாசர், 'உலக மாதாவாகிய அழகுத் தேவியும் உலக ரட்சகனுகிய இறைவனைப்போல் பிறப்பில்லாதவள்; எனினும் தன் சங்கற்பத்தினல் தோன்றுவதும் மறைவதுமாயிருப்பாள்!' என்று பதில் சொன்னர்.

பிறகு இவர் அழகுத் தெய்வம் பாற்கடலில் அவதரித்ததற்குக் காரணம் என்னவென்று யோசித்தார். அதைக் குறித்தும் சாமர்த்தியமாகவும் சாதுரியமாகவும் ஒரு கதையை அமைத்தார். உண்மையில், இவர் அக்காட்சியை மனக் கண்ணுல் கண்டார் என்றே கூறுதல் வேண்டும். அப்பால் இவர் தாம் தரிசனம் செய்த காட்சியை உருக்கமாகவும் ருசியாகவும் ரிஷிகளுக்கு எடுத்துரைத்தார்.

'கேளுங்கள், முனிவர்களே! உலக உருண்டைக்கு அப்பாலுள்ள பரமபத ராஜ்யத்திலே சகல அழகுகளும் நிறைந்திருக்கின்றன. அங்கே அழகுத் தெய்வமான திருமாமகள் பொன்னரசியாகவும் புகழரசியாகவும் பெண்ணரசியாகவும் வீற்றிருக்கிருள்.

'ஒரு சமயம் ஒரு வித்தியாதரப் பெண் அவ்வுலகத்தில் போய்ச் சேர்ந்தாள். அப் பெண்மணி அழகுத் தெய்வத்தின் புகழை யாழிசையில் அற்புதமாக அமைத்துப் பாடினுள். அழகுத் தெய்வத்தின் செல்வச் சிறப்பே உலகமாகவும் இயற்கையழகாகவும் விரிந்து கிடக்கிறதென்றும், அழகுத் தெய்வமே உலக ரட்சகராகிய திருமாலின் திவ்ய சக்தியாகுமென்றும், இத்திவ்ய சக்தியினுலேயே திருமால் தனது காத்தல்-தொழிலை இனிது நிறைவேற்றுகிருரென்றும் பாடித் தோத்திரம் செய்தாள். திருமகள் உள்ளம் உவந்து கண்மலர் பரப்பித் தன் கூந்தலில் சூடியிருந்த ஒரு மலர் மாலையை எடுத்து அவள் கையில் வெகுமானமாகக் கொடுத்தாள். அவள் அதைத் தன் வீணையில் சூட்டிக் கொண்டாள்.

'கேளுங்கள் ரிஷிகளே! ஒரு பெருவனத்தின் வழியாக அப்பெண் போய்க்கொண்டிருந்தாள். அவளது வீணையைச் சூழ்ந்து விளங்கிய பூமாலையின் திவ்ய நறுமணம் 'கம்' என்று திக்கெல்லாம் அதிமனேஹரமாகப் பரிமளித்தது. அப்பொழுது அவள் ஒரு முனிவனை எதிரில் கண்டாள். அவன்தான்,

சாபத்தாலும், சாபமொழி
தன்னுல் வளரும் தவத்தாலும்,
கோபத்தாலும் பேர்படைத்த
கொடியமுனிவன் துருவாசன்.

'அக்கொடிய முனிவன் அப்பெண்மணியையும் அவளது வீணையையும் மலர் மாலையையும் கண்ணுற்றதும், ஆறுதலும் ஆனந்தமும் அடைந்தான். பெண்மணியும் சந்தோஷத்தினுல் தன் வீணையிலிருந்த மாலையை அம்முனிவனுக்கு நன்ருகக் காட்டினுள். அதன் அருமை பெருமைகளை வருணித்தாள். 'திருமாமகள் தனது திருமுடியிலே சூடிய மாலை இது! அவள் எனக்கு வெகுமானமாகக் கொடுத்தாள். முனியரசே! இதை நான் உமக்கு வெகுமானமாகத் தருகிறேன்' என்று பூமாலையை அன்போடு அளித்தாள். 'இவ்வெகுமானம் இன்று எனக்குக் கிடைத்தது ஆச்சரியம்! ஆச்சரியம்!' என்று துர்வாச முனிவன் மாலையைத் தன் தலையிலே சூடிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடினுன்.'

இவ்வாறு அழகாகக் கதை சொல்லி வந்த வியாசர் அக்கதை தம் கண்ணுக்கு எதிரே நடந்துகொண்டு போவதாகப் பாவித்துச் சொல்லிக்கொண்டு வந்தார். மதயானையின் மேல் மதோன்மத்தனுக வீற்றிருந்து கோலாகலமாகப் பவனி வரும் இந்திரனைச் துர்வாசன் சந்திப்பதையும், தன் முடியினின்றும் பூமாலையை எடுத்து முனிவன் அரசன் கையில் வெகுமானமாகக் கொடுக்க முயல்வதையும், தேவராஜன் செருக்கோடு மாலையைக் கையால் வாங்காமல் அலட்சியமாக அங்குசத்தால் வாங்கித் தனது யானையின் பிடரியிலே வீசி எறிவதையும், மத மிகுதியினுல் கண் சுழன்று விரைந்து சென்றுகொண்டிருந்த யானை உடனே பனைமரம்போல் திரண்டு உருண்டு நீண்ட தன் துதிக்கையினுல் மாலையைப் பறித்து இழுத்துக் காலின் கீழ் இட்டுத் தேய்ப்பதையும், தெளிவாகக் கண்ணில் கண்டு வருணித்தார். கதை கேட்டவர்களும் அப்படியே அக்காட்சிகளைக் கண்ணுல் கண்டார்கள்.

வியாசர் துர்வாசர் கோபத்தை விசேஷ மனேபாவத்தோடு வருணித்தார். அவ்வருணனையைக் கேட்டவர்கள் அஞ்சி நடுங்கினுர்கள். "இந்திரனே! நீ உன் செல்வச் செருக்கினுல் மகாலட்சுமியின் மலர்மாலையை இகழ்ந்து மதயானையின் கைப்படுமாறுசெய்தாய். அதன் பயனுக நீ உன் பெருஞ் செல்வங்களை யெல்லாம் இழந்து வறுமையினுல் துன்பம் அடைவாயாக!' என்று கடுங்கோபத்தோடு முனிவன் சாபம் கொடுப்பதையும், இந்திரன் மன்னிப்பு வேண்டுவதற்கும் அஞ்சி ஓடுவதையும், இந்திரனது செல்வங்கள் யாவும் பாற்கடலில் போய் மறைவதையும், லட்சுமியின் கடாட்சம் அற்று வருந்தும் தேவர்களை அரக்கர்கள் ஹிம்சிப்பதையும், தேவர்கள் திருமாலின் அருள் பெறுவதையும், தேவர்களும் அசுரர்களும் மலையை மத்தாகவும், வாசுகி என்ற மகா நாகத்தைக் கயிருக

வும் கொண்டு பாற்கடலைக் கடைவதையும் வியாசர் கேட்போருக்குச் சுவை பிறக்குமாறு சித்தரித்துக் காட்டினர்.

## 2. கதை வளர்கிறது

பிறகு, அசுரர்கள், 'நாங்கள் உயர் குலத்தில் பிறந்தோம்' என்று சொல்லி, வாசுகியின் வாலைப் பிடித்துக் கடைய மறுப்பதையும், திருமாலும் தேவர்களும் பணிவோடு வாலைப் பற்றி நிற்பதையும், வாய்ப்புறம் நின்ற அசுரர்கள் உற்சாகமாகவும் வேகமாகவும் கடைகையில் வாசுகியின் மூச்சுக் காற்றாலும் விஷாக்கினியாலும் தகிக்கப் படுவதையும் வேடிக்கையாக நகைச்சுவையோடு வருணித்தார்.

இங்ஙனம் தேவாசுரர் பாற்கடலைக் கடைந்து கொண்டிருக்கைகையில், துருவாச முனிவன் சாபத்தால் கடலில் சென்றொளித்த சுவர்க்க லோகத்துப் பொருள்களெல்லாம் மீண்டும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுகின்றன. தேவாசுரர்கள் அதிவேகமாகக் கடைகிறார்கள். சமுத்திரம் அலைப்பட்டு மிகவும் குழம்புகிறது. அதன் வயிறு கிடங்கெழுந்து கிழிகிறது. மீண்டும் சமுத்திரம் அலைபுரண்டு கதறுகிறது, அலறுகிறது. தேவாசுரர்கள் கடைகயிற்றை முறுக வாங்கிக் கடைகிறார்கள். பாற்கடல் மறுகிப் பொங்குகிறது; உடனே பிரளயகால நெருப்பை ஒத்துக் காளகூள விஷம் பிறக்கின்றது.

ஆலகாலமென்னும் பெயர் வாய்ந்த அக்கொடிய மகாவிஷம் உக்கிரமான வேகத்தோடு திக்கெல்லாம் போர்த்து மேலும் கீழும் பரவி நிற்கின்றது. தேவர்களும் பிறரும் நடுநடுங்கி மூச்சுத்திணற ஓட்டம் பிடிக்கிறார்கள். அப்பொழுது 'அஞ்சாதேயுங்கள்! அஞ்சாதேயுங்கள்!' என்று சிவபெருமான் தேவர்களுக்கு அபயம் அளிக்கிறார்; விஷத்தைப் பட்சித்துத் தேவர்களை ரட்சிக்கிறார்.

'அப்பெருமான் தேவியாரை நோக்கி, 'ஒருவருக்கொருவர் உதவி செய்து தியாகம் செய்வது அவசியம். நங்காய்! உயிர்களுக்கு இரங்கி உதவி செய்வோனே உயிர்க்கு உயிராகிய இறைவனை ஆராதிப்பவன்' என்று உபதேசிக்கிறார். அம் மகாவிஷம் அதிபயங்கரமானதால் தன் கொடுமையைக் காண்பிக்க விரும்பி அவர் திருக்கழுத்திலும் கறுப்பை உண்டாக்குகிறது. சிவபெருமான் அதன் வேகத்தை அப்படியே அடக்கிவைத்து, அவ்விஷக் கறுப்பையும் ஒரு பூஷணமாகவே அணிந்து கொள்ளுகிறார். 'சிவபெருமான் கழுத்திலே தங்கிய ஆலகால விஷமும் ஓர் ஆபரணமாக விளங்குகிறது! கொடியோரும் பெரியோரைச் சேர்ந்தால் தமது கோது நீங்கி நலம் பெற்று உய்வர் என்பது உண்மையே யன்றோ?' என்று தேவர்களும் பிறரும் அதிசயிக்கிறார்கள்.'

இவ்வாறு வியாசர் கதை சொல்லிவரும்போது ஒரு பிரமசாரி குறுக்கிட்டு, 'சிவபெருமான் விஷபட்சணம் செய்தார் என்றால், தேள்

களுக்கும் பாம்புகளுக்கும் விஷம் எங்கேயிருந்து கிடைத்தது?' என்று ஒரு கேள்வி கேட்டான்.

உடனே வியாசர் சிரித்துக்கொண்டு, 'சிவபெருமான் ஆலகால விஷத்தை உள்ளங்கையில் அடக்கிப் பட்சணம் செய்யும்போது சில விஷ பிந்துக்கள் சிந்திப்போயின. அவற்றைத் தேள்களும் விஷப் பாம்புகளும் மற்றுமுள்ள விஷ ஜந்துக்களும் மகிழ்ந்து பங்கிட்டுக் கொண்டன' என்று பதில் சொன்னார். வியாசரின் சமயோசிதமான ஹாஸ்ய புத்தியை ரிஷிகள் கொண்டாடினார்கள்.

### அமிர்த கலசமும் மாயா மோகினியும்

வியாசர் கதையைக் கண் எதிரே நடத்திக் காட்டியதோடு கதாபாத்திரங்களான தேவாசுரர் முதலானவர்களின் இதயங்களில் புகுந்து புகுந்து, செருக்கு காதல் பகை வீரம் பேராசை முதலிய உணர்ச்சிகளைத் தாமே அனுபவித்து வருணித்தார்.

'சிவபெருமான் விஷபானம் செய்தபின், தேவாசுரர், 'இன்று புதியவர்களாகப் பிறந்தோம்!' என்னும் குதூகலத்தை அடைந்தவர் களாய்த் திரும்பவும் சமுத்திரத்தைக் கடைகிறார்கள். இப்பொழுது அமிர்த கலசம் எழுகிறது. அதைக் கையில் ஏந்திக்கொண்டு ஒரு மகாபுருஷன் தோன்றுகிறான். தேவர்களும் அசுரர்களும் கடல் கடைந்த களைப்பை முற்றும் மறந்து விடுகிறார்கள். அசுரர்கள் வாயில் நீர் ஊறுகிறது. பாற்கடலின் சாரமாகிய அமிர்தமன்றோ இது! அவர்கள் வீண் விவகாரங்களில் பொழுதுபோக்க விரும்பவில்லை. ஓடிச் சென்று மகா புருஷனை வளைத்துக் கொள்ளுகிறார்கள். அப்புருஷன் கையிலிருந்து பேராசையோடு அமிர்த கலசத்தை விரைவில் பிடுங்கிக் கொள்ளுகிறார்கள். தேவர்களைப் பயப்படுத்து கிறார்கள். வலிமைக்கு உரிமையும் வேண்டுமோ?

'அப்பொழுது அங்கே மேகலையும் சிலம்பும் சப்திக்கின்றன. ஆரம் முதலிய ஆபரணங்கள் ஒளி செய்கின்றன. ஜகன்மோகன ஸ்திரீ ரூபம் ஒன்று உதயமாகிறது. இன்னதென்று அறியப்படாத— பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத—பேரழகோடு தோன்றும் அவ்வடிவத்தை அசுரர்களும் தேவர்களும் பார்க்கிறார்கள்.

'அம் மோகினியுருவம் திருமாலின் மாயை என்பதை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. மோகினிப் பெண் கூந்தல் சோர இளநகையரும்பி அடிமலர் சிவக்க நடந்து வருவதைக் கண்ணுற்ற தேவர்களும் அசுரர்களும் ஆச்சரியத்தால் விழுங்கப்பட்டவர்களாகி மதிமயங்கி நிற்கிறார்கள். அவர்கள் கலகத்தை மறந்து விடுகிறார்கள்; அமிர்த கலசத்தை மறந்து விடுகிறார்கள். அந்த மோகினியின் கண்களிலே, அமிர்தத்தையும் ஆலகால விஷத்தை யும் ஒருங்கே காண்கிறார்கள்!

'மோகினிப் பெண், அசுரர்கள் கலகம் செய்து கொண்டிருந்த இடத்திற்கு அருகே வந்து நிற்கிறாள். அசுரர்,

மின்னொரு நுண்ணிடை
மெலிந்துதடு மாற
அன்னமென நின்றவள்
அடித்தளிர் இறைஞ்சி
'இன்னமுதம் நல்குநி
எமக்கெ'ன அளித்தார்.

'அமிர்தத்தைத் தேவர்களும் அசுரர்களுமாகிய எங்களுக்கு நீயே பங்கிட்டுக் கொடுக்கவேண்டும்' என்று அசுரர்கள் பிரார்த்தித்த போது, மோகினியாள் குறும்பாகச் சரித்துக்கொண்டு, 'அசுர சிரேஷ்டர்களே! பண்டிதர்களே! பேதையாகிய நான் நியாயமாகப் பங்கிட்டுக் கொடுப்பேன் என்று எவ்வாறு நம்புகிறீர்கள்?' என்று கொஞ்சும் குரலில் கேட்கிறாள்.

அக் குறுஞ்சிரிப்பும் வினோத வசனமும் அசுரர் நெஞ்சங்களை அள்ளித் திறைகொள்ளுகின்றன. அவர்கள் முன்பின் யோசனை செய்யாமல், அமிர்த கலசத்தை எடுத்துவந்து அவள் அடிகளில் வைத்து, 'பெண்ணமுதே! நீ இப்பொழுது வழங்கிய மொழியே எங்களுக்கு இன்னமுதம்! இனி உன் இஷ்டப்படி இக் கடலமுதை விநியோகிப்பாய்!' என்று தொழுது வேண்டுகிறார்கள்.

மோகினியாள் அமிர்த கலசத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, அசுரர்களைக் கடைக் கண்ணால் கொல்வதுபோல் நோக்கி நகையாடுகிறாள். 'நான் செய்வது நன்மையானாலும் தீமையானாலும் ஒப்புக்கொள்கிறீர்களா? அப்படியானால்தான் இந்த அமிர்தத்தை விநியோகிப்பேன்' என்று பிடிவாதம் செய்கிறாள். அசுரர்கள் மாயா மோகினியின் மாயா விலாசத்தில் மோகித்து, 'அன்னமே! சொர்ணமே! சொன்னபடியே செய்வோம்' என்று இணங்குகிறார்கள்.

பிறகு மோகினி அமிர்த கலசத்தை அழகு ஒழுகும் தளிர்க் கையில் ஏந்திக்கொண்டு வருவதையும், சொல்லின் இடையே அமிர்தம் துளிக்கும் பிரிய வசனங்களால் அசுரர்களை வஞ்சித்துத் தாண்டிச் செல்வதையும், சென்று தூரத்திலிருந்த தேவர்களுக்கு அமிர்தத்தை அள்ளி அள்ளி வழங்குவதையும், அசுரர் 'அமுது தா!' என்றால், அவள், 'நீங்கள் எனக்கு அளித்த வாக்குறுதியை மறத்தல் அழகோ?' என்று வெறுத்துரைப்பதையும், 'இப் பேச்சும் செய்கையுமே நமக்கு அமிழ்தம்!' என்று அசுரர்கள் திருப்தி அடைவதையும், இவளோடு விவாதம் செய்தாலும் சிநேகத்திற்குக் குறைவு வரும் என்று அவர்கள் பயந்திருப்பதையும், 'இவையெல்லாம் உண்மையாகக் கண்முன் நடைபெறுகின்றன!' என்று ரிஷிகள் நம்பும்படி வியாசர் கற்பனை செய்தார்.

இக் கற்பனைகளை அவர் தாம் அழகுத் தெய்வத்தைக் குறித்துக் கண்ட கனவோடு கலந்து ஒரு கதம்பம் ஆக்கினார். இக் கதம்பத்தை ஓர் அழகிய கதையாக்கி, ரிஷிகள் காதிலும் குருகுல மாணாக்கர்

காதிலும் போட்டுப்பார்த்தார். தம் இஷ்டப்படி அவர்களைச் சிரிக்கச் செய்யவும், விம்மி விம்மி அழச் செய்யவும், பிரமிக்கச் செய்யவும், நடுங்கச் செய்யவும் தமக்கு ஆற்றல் உண்டென்பதை அவர் நன்குணர்ந்து கொண்டார். இவ்வாறு கதை சொல்லி வருவதால் தமக்கும் சீடர்களுக்கும் இடையே சிநேக உணர்ச்சி அதிகரித்து வருகிறதென்பதையும் அநுபவத்தில் கண்டறிந்தார்.

## புராணம் பிறந்தது

இந்த இரகசியத்தை உணர்ந்த பின், இனி இத்தகைய அழகிய கதைகளால் பாரத சமுதாயத்தையே வசீகரித்து மலர்ச்சி பெறுமாறு செய்யலாம் என்றும், பொது ஜனங்களிடையே நல்ல எண்ணங்களையும் உயர்ந்த லட்சியங்களையும் விதைக்கலாமென்றும் வியாசர் நினைத்தார். தமது கற்பனைக் கதையை அக்காலத்து ஜனங்களுக்குள் வழங்கி வந்த பல்வேறு பழைய கதைகளோடும் நம்பிக்கைகளோடும் சேர்த்துக் கோத்து வைத்தார். பாட்டிமார் கதைகளையும் இவர் அலட்சியம் செய்யவில்லை.

நல்ல கதைகளைத் திரட்டி ஒரு புராணம் ஆக்கினார். இக்கதைகளோடு கவிதையழகையும் ஒருவாறு கலந்தார். பண்டிதர்க்கும் பாமரர்க்கும் ஒருங்கே இன்பம் தரும் 'செவிநுகர் கனிக'ளாகச் சொரிந்தார்.

இக்கதைகளைக் கேட்ட நம்முன்னோர் சந்தோஷம் அடைந்தனர். வீர வாழ்க்கையிலும் நல்லொழுக்கத்திலும் சமுதாய தர்மத்திலும் ஆசை கொண்டனர். அவர்களுடைய உற்சாகம் ஓங்கியது; அறிவு வளர்ந்தது; இதயம் விரிந்தது. அவர்கள் அக்கதைகளை அடிக்கடிக் கேட்க விரும்பினார்கள். வியாசர் புராணம் ஒரு சுவைக் களஞ்சியமாக இருந்தது.

வியாசரும் சீடர்களும் புராணக்கதைகளை எழுதி வைத்தனர். வியாசர் காலத்திற்குப் பின், சீடர்கள் அதிகமான கதைகளைச் சேர்த்தார்கள். அவற்றுள் சில சுவையுடையன அல்ல. ஏன்? அவர்களுக்கு வியாசரின் ரசிகத் தன்மை இல்லை. சௌந்தரிய உணர்ச்சி இல்லை. பிற்காலத்தாரும் கதைகளைச் சேர்த்தார்கள். அவற்றுள் சில நல்ல கதைகளும் அல்ல. எனினும் அவர்கள் வியாசர் பெயராலேயே புராணம் செய்தார்கள்.

இவ்வாறு ஒரே புராணம் நாளடைவில் பதினெட்டுப் புராணங்களாகக் கிளைத்தது. உபபுராணங்கள் தோன்றின. தலபுராணங்கள் புற்றீசல்போலப் புறப்பட்டன; சமீப காலம் வரைக்கும் 'திடும்! திடும்!' என்று புறப்பட்டுக் கொண்டிருந்தன; இன்னும் சிற்சில இடங்களில் சிருஷ்டியாகி வருகின்றன. இப் புராணங்களெல்லாம் வியாசர் தலைச்சுமையாகி விட்டன!

ஆதியில் சௌந்தரிய உணர்ச்சியைத் தூண்டவும் மனோ பாவத்தை வசப்படுத்திச் சமுதாய தர்மத்தை வளர்க்கவும் ஏற்பட்ட

புராண உலகம் பின்னுளில் மதவெறி கொண்டவர்களின் ஏகபோக ஆட்சியில் இருந்தது. அவர்கள் தங்கள் இஷ்டப்படி அவ்வுலகத்தில் கூட்டல் கழித்தல் பெருக்கல் வகுத்தல் எல்லாம் செய்து பார்த்தார்கள். கதைகளைக் கூட்டினுர்கள், பெருக்கினுர்கள்; சில கதைகளைக் கழித்துவிட்டார்கள். வேறு சில கதைகளை உருத் தெரியாமலே பிரித்து வைத்தார்கள். மதத்தின் பெயரால் வீரத்தை மறந்தார்கள்; வாழ்க்கையை மறந்தார்கள்; பலவீனத்தையும் ஒற்றுமைக் குறைவையும் முயற்சியின்மையையும் மறுலோக நினைப்பையும் ஜனங்களிடையே பிரசாரம் செய்தார்கள். 'இவைகள் எல்லாம் கதைகள் அல்ல, உண்மையாகவே நடந்தவை. நம்பாவிட்டால் நரகம்' என்று பயப்படுத்தினுர்கள்.

இவ்விதமாக ஜனங்களின் அறிவுக் கண்ணை மூடிவிட்டார்கள். அக் கண்ணைத் திறக்க முயன்றவர்களைப் பயப்படுத்துவதற்காகப் பல நரகங்கள் சிருஷ்டிக்கப்பட்டன. அந்நரகங்களை அவற்றின் சிருஷ்டிகர்த்தாக்களுடைய மனக் கொடுமையோடு, கருட புராணம் முதலிய புராணங்கள் படம் பிடித்து வைத்திருக்கின்றன.

## முடிவுரை

ஆதி வியாசர் கண்ட அழகிய கனவு பிற்காலப் போலி வியாசர்களால் பாழாக்கப்பட்டது. அமிர்தத்தோடு பிறந்த அழகுத் தெய்வத்தின் கதை, பாற்கடல் கடைந்த கதையோடு இரண்டறக் கலந்து பழைய இந்தியாவில் நமது ஜனங்களுக்குப் பேருணர்ச்சி தந்ததென்று ஊகிக்கலாம். இது சௌந்தரிய உணர்ச்சியோடு தரும ஆவேசத்தையும் தோற்றுவித்தது; செருக்கு, பேராசை முதலிய அசுர குணங்களைப் பரிகசித்தது; நன்னம்பிக்கையை ஊட்டியது.

இத்தகைய கதையையும் பிற்காலத்தார் தங்கள் மதப் போர்களிலே ஒரு கொலைக் கருவியாக்கி உபயோகித்துக்கொள்ள முயன்றனர். 'பாற்கடல் சிவனுக்கு விஷத்தைக் கொடுத்தது; விஷ்ணுவுக்கோ லட்சுமியைக் கொடுத்தது. இதனுல் எங்கள் விஷ்ணுவே முழுமுதற் கடவுள் என்பது உங்களுக்கு விளங்கவில்லையா?' என்று சைவர்களை நோக்கி வைணவர்கள் பரிகாசமாகக் கேட்டார்கள்.

சைவர்களும் அதே கதையை ஆதாரமாகக் கொண்டு, தங்கள் சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்று ஸ்தாபித்தார்கள். 'சிவபெருமான் விஷபட்சணம் செய்யாவிட்டால், மகாலட்சுமி விதவையாகிவிடுவாள் அல்லவா?' என்று வைணவர்களை நோக்கிச் சிரித்தார்கள்.

இந்நிலையில், கதையின் அடிப்படையான கருத்தை இருதிறத்தாரும் மறந்துவிட்டனர். நாடு மத பேதங்களுக்கும் சாதி பேதங்களுக்கும் ஒரு காட்சிச்சாலையாகிவிட்டது. மதாவேசம், சாதித் திமிர் முதலிய துர்க்குணங்கள் அழகுத் தெய்வத்தைக் கொலை செய்ய

முயன்றன. 'கலியாண அவசரத்தில் தாலி கட்ட மறந்தது' போல எத்தனையோ தெய்வ வழிபாடுகளுக்கிடையே, நாம் அழகுத் தெய்வத்தை மறந்து விட்டோம்!

லட்சுமி கடாட்சத்தால், தேவர்கள் செல்வச் சிறப்பும் விசேஷ உற்சாகமும் சௌரிய தைரிய சாகசங்களும் பெற்று, அசுரர்களை வென்று வலியழித்தனர் என்று வியாசர் சொல்லுகிறார். நாமும் அழகுத்தெய்வத்தின் அருட்செல்வம் பெற்று, நமது சமுதாய வாழ்க்கையைப் பாழாக்கும் அசுரகுணங்களை ஒழித்து முன்னேற வேண்டும்.

அழகு லட்சுமி நமது முன்னோர்களுக்கு ஆதிலட்சுமி, கஜலட்சுமி, தனலட்சுமி, தானியலட்சுமி, வீரலட்சுமி, விஜயலட்சுமி, சந்தான லட்சுமி, சௌபாக்கிய லட்சுமி என்ற அஷ்ட லட்சுமிகளாகக் காட்சி வழங்கினாள். ராஜ்ய லட்சுமி இன்று சுதந்திர லட்சுமியாகவும் காட்சி அளிக்கிறாள். அண்மையில் சுபிட்சா லட்சுமியாகவும் காட்சி அளிப்பாள் என்று ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

# 3. திருமகளும் திருமாலும்

திருமகளோடு காட்சி தரும் விஷ்ணுவைத்தான் திருமால் என்கிறார்கள். திருமாலைச் சாதாரணமாக லட்சுமி-நாராயண மூர்த்தி என்று கூறுவதுண்டு. கோடை மேகம் திருநீறு அணிந்த செம்மேனியனான சிவபெருமானைப்போல் காட்சியளிக்கிறதென்றும், அம் மேகம் கடலில் மேய்ந்து (அதாவது கடல்நீரைப் பருகியபின்) திருமங்கையோடு கூடிய விஷ்ணுவைப்போல் மீளுகிறதென்றும் தன் காவிய முகப்பிலே கம்பன் வருணித்திருக்கிறான். இத் திருமாலே சீதாராமராக அவதரிப்பதாகவும் தெரிவிக்கிறான்.

### வசிஷ்டரின் ஆனந்தக் கனவு

தனக்குப் பிள்ளை இல்லையென்று தசரத சக்கரவர்த்தி வருந்தி அந்த வருத்தத்தைத் தன் குலகுருவான வசிஷ்டரிடம் தெரிவிக்கிறான். தனக்குப் பிள்ளை இல்லை என்ற வருத்தத்தைக் காட்டிலும், தனக்குப் பின் தலைவன் இல்லாமல் உலகம் வருந்துமே என்பதுதான் தசரதன் உள்ளத்தை வருத்திய அருந்துயர் ஆகும் என்பதைத் தசரதன் வாய்மொழியாகத் தெரிவிக்கிறது கம்பராமாயணம்.

சக்கரவர்த்தியின் இத்தகைய மனநிலையை அறிந்துகொண்ட வசிஷ்ட மகரிஷி தியானத்தில் சற்று மூழ்கி ஒரு காட்சி காண்கிறார். அலைகடல் நடுவில் அனந்தன் என்ற பாம்பின்மேல் மலைபோலத் துயின்று கொண்டிருக்கும் கருமேகமும் மின்னலும் போல லட்சுமி—நாராயணமூர்த்தியின் தரிசனம் தியான வாயிலாகக் கிடைக்கிறது

வசிஷ்டருக்கு. அரக்கர் கொடுமையிலிருந்து 'விடுதலை வேண்டும் எங்களுக்கு' என்று வருந்திக் கதறும் தேவர்களுக்கு ஆறுதலாக, 'கொலையே தொழிலாகக் கொண்ட அரக்கர்களின் கொடுமை தீர்ப்போம்' என்று அறிதுயில் அமர்ந்த மூர்த்தி கூறும் வாக்கும் முனிவரின் உட்செவியில் விழுகிறது. அரக்கர் கோனாகிய ராவணனைத் 'திருவிலி' (லட்சுமிகடாட்சம் இல்லாதவன்) என்று விண்ணவர் யாவரும் குறிப்பிடுவதும் முனிவர் பெருமானுக்குத் தெளிவாய்க் கேட்கிறது.

கருமா முகில் செந்தாமரைக் காடு பூத்ததுபோன்ற திருமேனியுடன் சங்குசக்கரங்களை இருபுறமும் ஏந்தியவண்ணம் ஒரு பொற் குன்றின்மேல் வருவதுபோல் வானவீதியில் கருடன்மேல் தோன்றி வானவர்களுக்குக் காட்சியளிப்பதும் வசிஷ்டரின் அகக்கண்ணுக்கு இலக்காகிறது. திருவிலியாகிய அரக்கனை ஒழிப்பதாக வாக்கருளும் பெருமான் 'திருவொடும் பொலிய'த் தோன்றுகிறானும். இதனால், சாதுக்களையும் தேவர்களையும் இரட்சிக்கும்போது திருமாமகளுடன் சேர்ந்தே பகவான் காட்சியளிக்கிறான் என்ற வைணவர் கொள்கை உறுதிப்படுகிறது.

தசரத புத்திரனாகத் திருமால் அவதரிக்க, மகாலட்சுமி ஜனக குல சுந்தரியாகத் தோன்றுகிறாள்.

அறம் நிறம்பும்என்(று)
 ஐயன் அயோத்தியில்
பிறந்த பின்பும்
 பிரிவிலன் ஆயினான்

என்று கவிஞர் கூறுகிறபடி, பாற்கடலில் திருமாலைப் பிரியாத திருமகள் இராமாவதாரத்திலும் அறம் வளர்க்க உடன் இருக்க வேண்டுமென்று தானும் அவதரிக்கிறாளாம்.

திருமணத் தூதராக வருகிறார் விசுவாமித்திர முனிவர். அவருடன் ராமனை அனுப்ப வேண்டுமென்று முடிவுகட்டிய தசரதன் 'திருவின் கேள்வனைக் கொண்டுவாருங்கள்' என்று கட்டளையிடுகிறான், எவலாளரை நோக்கி. திருவின் கேள்வன் என்றால் லட்சுமியின் நாயகன். திருமகளாகிய சீதையை ராமன் மணந்து கொள்வதற்குமுன்பே தசரதன் தன் பிள்ளையை இப்படிக் குறிப்பிடுவது சற்று விநோதமாய் இருக்கிறதல்லவா?

### லட்சுமியும் சீதாலட்சுமியும்

தனக்குப்பின் ராஜ்ய லட்சுமியின் நாயகனாக இருக்கப்போகும் புதல்வன் என்ற பொருளில்தான் தசரதன் பேசுகிறான். ஆனால் திருவாகிய சீதையின் கல்யாணம் இங்கே தொனிப் பொருளாக முன்கூட்டியே குறிக்கப்படுவதையும் ரசிகர்கள் கண்டு கொள்வார்கள்.

சீதையையும் ராமனையும் பொதுவாக ஒருவரும் பிரித்துப் பேசுவது இல்லை. மால் திருமால்தான், அப்படியே ராமன் சீதா ராமன்தான். சீதையையும் ராமனையும் பிரிக்க முயன்று பிரித்து விட்டதாக மயங்கிய ராவணன் லட்சுமி கடாட்சம் இல்லாதவனாகி (திருவிலியாகி)த் தன் செல்வங்களையெல்லாம் இழந்து உயிரையும் இழந்தது பிரசித்தம். ராமனிடமிருந்து சீதையைப்பிரித்த குற்றம் ராவணன் உலகத்திற்குச் செய்த கொடுமைகளுக்கெல்லாம் சிகரம் போலத் தோன்றி அவனை உயிரிழந்து பழிகொள்ளச் செய்தது.

எனவே, ராவண வதத்திற்குச் சீதாலட்சுமியின் தியாகம் இன்றியமையாதது ஆகிறது. அறத்தை நிலைநிறுத்துவது என்றால் கடவுளும் அவதரித்துத் தியாகம் செய்யவேண்டும். திருமாலின் தியாகத்திற்குத் திருமாமகளின் தியாகமும் இன்றியமையாதது என்பது இராமாயண கதையின் ஆழ்ந்த பொருள்களில் ஒன்று. இந்தத் தியாகம் செய்யவே லட்சுமி சீதாலட்சுமியாகப் பிறந்தாள் என்கிறது ராமாயணம்.

### லட்சுமியும் வாமனாவதாரமும்

ராமாவதாரத்திற்கு முற்பட்டது வாமனாவதாரம். இந்த அவதாரக் கதையை ராமனுக்கு உற்சாகமூட்டுவதற்காகச் சொல்லுகிறார் விசுவாமித்திரர். வாமனாவதாரத்தில் லட்சுமி உடன் வரவில்லை; பிரிந்தே இருந்துவிட்டாள் தன் பாற்கடல்-வீட்டிலே. சித்தாச்சிரமத்தில் திருமால் தவஞ்செய்கிறான் லோகோபகாரமாக. திருவைப் பிரிந்த நிலையில்தான். அப்போது மகாபலி என்ற அசுர சக்கரவர்த்தி தன் வலிமைகொண்டு விண்ணையும் மண்ணையும் அபகரித்துக் கொள்ளுகிறான். திருட்டுச் சொத்தைத் தன் உடைமையாகக் கருதும் அறிவிலிபோல் திக்குவிஜயம் செய்து கொண்டுவந்த உடைமைகளையெல்லாம் தன் சொந்தச் செல்வங்களாக நினைத்துக் கொள்கிறான். கடைத் தேங்காயை வழிப் பிள்ளையாருக்கு உடைப்பதுபோல் அந்தச் செல்வங்களை அந்தணர்களாகிய முனிவர்களுக்கு வாரி வழங்கவும் முற்படுகிறான்.

மகாபலி என்ற இந்த அசுரனிடம் பக்தியும் காணப்படுகிறது. ஆம்; திருமாலின் பக்திதான். விஷ்ணுபக்தனாக இருந்தபோதிலும், தன் அசுரச் செருக்கினால் இவன் தீயவனென்றே வானவர்களால் மதிக்கப்படுகிறான். இவனுடைய தானதருமங்களும். கொடுந் தொழிலாகவே கருதப்படுகின்றன. இந்த நிலையில் அசுரச் செருக்கை மட்டும் அழித்து இந்த அசுரனை அன்பனாக்கிக்கொள்ள விரும்பும் திருமால் திருமகளைப் பிரிந்து ஒரு பிரமசாரியாகவே வருகிறான். வந்து, அசுரமதத்தை அழித்து உலகத்தை வியாபித்திருந்த அசுர இருளைப் போக்குகிறான். மகாபலியின் உள்ளத்திலும் அசுர இருள் போய் மெய்யன்பு பிறக்கிறது. உலகப் பொருள்களெல்லாம் இறைவனுக்கே சொந்தமானவை என்ற ஞானமும் உதயமாகிறது.

இப்படிக் கதையை முடிக்கும் விசுவாமித்திரர், இந்த அவதார நிகழ்ச்சி முடிந்ததும் திருமால் பாற்கடல்-வீடுபோய்த் திருமகளைச் சந்திப்பதாகவும் ஒரு காட்சியை லேசாகக் குறிப்பிடுகிறார்.

கரியவன் உலகெலாம்
கடந்த தாளிணை
திருமகள் கரம்தொடச்
சிவந்து காட்டவே

என்பது விசுவாமித்திரர் வாக்கு.

உலகெலாம் கடந்த திருவடிகளைத் திருமகள் தன் கையால் பிடித்து விடுகிறாளாம். அந்தக் கால்களும் வருத்தம் தீர்ந்து சுகம் பெறுவதுபோல் சிவந்து காண்கின்றனவாம்.

திருமகள் கரம்தொடச்
சிவந்து காட்டவே

என்பது என்ன அழகான, ரசமான, இல்லறக் காட்சி!

உடனே திரை விழுகிறது. ஒரு கணம் தோன்றும் காட்சிதான். மறு கணம் ரசிகர் உட்செவியில் விழுகிறது திருமாலுக்கும் திருமகளுக்குமிடையே நிகழும் சம்பாஷணை. தன்னைப் பிரிந்து போனதால் தான் ரட்சக சக்தியைக் காட்டிலும் நிக்கிரக சக்தி மகாபலி விஷயத்தில் பிரயோகிக்கப்பட்டதாகத் திருமகள் கருதுவதாகவும், இனி அடுத்த அவதாரத்தில் திருமகளை அழைத்துச் செல்வதாகப் பெருமான் வாக்களிப்பதாகவும் ஊகித்துக் கொள்ளலாம்.

'ஏதோ வெளியில் போய் வருவதாகச் சொல்லி வெகு தூரம் போய்விட்டீரே! உலகமெல்லாம் நடந்து வருந்தினவோ இந்த மலரடிகள்! இனி நானும் உடன் வந்து பணிபுரிவேன்' என்று தெய்வக் காதலி கொஞ்சுவதாகவும், 'அப்படியானால் அடுத்துவரும் அவதாரத்தில் நீயும் தொடர்ந்துவா' என்று தெய்வக் காதலன் இசைவதாகவும் ஊகம் செய்துகொள்வதும் மிகையாகாது. உலகம் தாவிய சேவடி சிவப்பக் காடு சென்றான் ராமன் என்று இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கூறியுள்ளார். இந்த வாக்கை நினைத்துக் கொண்டே கம்பனும் 'உலகெலாம் கடந்த தாளிணை திருமகள் கரம் தொடச் சிவந்து காட்டவே' என்று பாடியிருக்கக்கூடும்.

வாமனாவதாரத்தில் உடன் செல்லாத குறைதீர ராமாவதாரத்தில் காடெல்லாம் கடந்தன திருமகளின் அடிமலர்கள். அழகிலும் அருளிலும் ராமபிரானையும் சீதாலட்சுமி வென்றுவிட்டாள் எனக் கூறும் கவிஞன் தியாகத்திலும் நாயகனை வென்று விடுவதாய்க் காட்டியிருப்பது கூர்ந்து நோக்கத் தக்கது. முடிகலைந்து நாடு துறந்து காடுசென்ற தியாகம் ராமனுக்கும் சீதைக்கும் பொது என்றால், சிறை புகுந்த தியாகம் சீதாலட்சுமிக்கே சிறப்பியல்பு அல்லவா? இதனால்

தான், மகாபாரதம் தூது சென்றவன் ஏற்றம் கூறுகிறது என்று சொல்லும் அறிஞர்கள் ராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது என்கிறார்கள்.

### லட்சுமியும் நரசிம்மாவதாரமும்

வாமனாவதாரத்திற்கு முற்பட்டது நரசிம்மாவதாரம். இந்த அவதாரத்தில் லட்சுமிக்கு என்ன தொடர்பு இருக்க முடியும்? காலம் வந்து கைகூடியதும் மகாபலியை இரக்கமின்றி அடக்க வேண்டுமென்று சென்றான் திருமால் பிரமசாரி வடிவில். மகாபலியைக் காட்டிலும் தீயவனாக இருந்த இரணியகசிபு என்ற அசுர சக்கரவர்த்தியை அடக்குவதற்கோ கொடிய நரசிங்க ரூபத்தையே தரித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. அத்தகைய உக்கிர நரசிங்கம்—ஆலகால விஷம் போலச் சீறி இரணியனை வதைக்கத் தோன்றிய நரசிங்கம்—லட்சுமியுடன் அவதரிப்பது சாத்தியமா?—உறவு கொள்வது தான் சாத்தியமா?

இரணியன் மிகவும் கொடிய முறையில் வதைக்கப்படுகிறான். இரணியக் கொடுமை தீர்ந்தும் நரசிங்கத்தின் உக்கிரம் தீர்ந்துவிடும் என்று தோன்றவில்லை. படைப்புக் கடவுளான பிரமன் இந்த உக்கிர மூர்த்தியைக் கண்டு நடுங்கிக்கொண்டே தோத்திரம் செய்யத் தொடங்குகிறான். ரட்சிக்க வந்த தெய்வகோபம் தங்களையும் பட்சித்துவிடுமோ என்று நடுநடுங்குகிறார்கள் தேவர்கள். ஆனால் 'உலகமனைத்தும் இப்பொழுது அழிந்துவிடும்' என்று சாதுக்கள் அஞ்சும்போதே, உலகம் அனைத்தும் காப்பாற்றப்படுவதைக் காண்கிறோம். இந்த நிலையில்தான் திருமாமகள் உக்கிர நரசிங்கத்தை வந்து அடைகிறாள்.

பிரமன் முதலியோர் மகாலட்சுமியைப் பிரார்த்தித்துக்கொள்ள, இவள் அஞ்சாது உக்கிர நரசிங்கத்தின் அருகில் செல்லுகிறாளாம். 'பூவின் அழகு வருகின்றது! அழகின் ஆபரணம் வருகின்றது! யாவர்க்கும் அவரவர் விரும்பும் செல்வம் வருகின்றது! விடுதலை என்னும் இன்பம் வருகின்றது! திருமாலின் உயிர்த்துணை வருகின்றது. அமுதின் உடன் பிறப்பு வருகின்றது! எல்லாருக்கும் தாய் வருகின்றாள்!' என்று கவிஞன் கட்டியங் கூறி அறிவிக்கின்றான், உக்கிர நரசிங்கத்தை நோக்கி வந்துகொண்டிருக்கும் பிராட்டியை.

திருமகளின் வருகையும், சிங்கப் பிரானின் சீற்றம் உள்ளே ஒடுங்குவதும் ஏறக்குறைய ஒரே கணத்தில் நிகழ்வதைக் காண்கிறோம். 'அஞ்ச வேண்டாம்' என்று அருள் சுரந்த நோக்கோடு சிங்கப்பிரான் கை அபயம் காட்டிய பின்பும் விண்ணவர்களுக்கு அச்சம் தணியவில்லையாம்; அருகில் செல்லவும் துணிவு பிறக்கவில்லையாம். 'இரணிய பயம் போச்சு, ஆனால் இந்தச் சிங்க பயம்?' என்று அல்லற்பட்டவர்கள் திருமாமகளை முந்திச் செல்லுமாறு

வேண்டிக்கொண்டு இவளைத் தொடர்ந்து செல்லுகிறார்களாம் சிங்கப் பிரானை நோக்கி.

திருமாலிடம் நம்மைச் சேர்ப்பிக்கின்றாள் திருமகள்; தாயின் தயவை முன்னிட்டுத் தந்தையை அடைய வேண்டும் என்பது ஸ்ரீ வைஷ்ணவக் கொள்கை. வைஷ்ணவ பரிபாஷையில், திருமகள் திருமாலிடம் புருஷகாரமாக நிற்கிறாள் என்பர். இந்தத் திருமகளைக் கவிஞன்,

பூவின் திருவை,
அழகின் புனைகலத்தை,
யாவர்க்கும் செல்வத்தை,
வி(டு)என்னும் இன்பத்தை,
ஆவித் துணையை,
அமுதில் பிறந்தாளை

என்றெல்லாம் வருணித்துக்கொண்டே போகிறான்.

சாதாரண வருணனை அல்ல இது. திருமாமகளின் பக்தியே உள்ளுருகி இப்படி வாக்காக வெள்ளமிடுகிறது. இந்த வருணனை பொங்கிய வண்ணமாய் இருக்கிறது. தன் அருகில் வந்த திரு மகளைச் சிங்கப்பிரான் நோக்கும்போதே அந்தச் சிங்க நெஞ்சும் அருள் மயமாகிவிடுவதைக் காண்கிறோம்.

செந்தா மரைப்பொகுட்டில்
செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை,
நறுந்தாழ் இளங்கொழுந்தை,
முந்தா உலகும்
உயிரும் முறைமுறையே
தந்தாளை நோக்கினான்
தன்ஒப்(பு)ஒன்(று) இல்லாதான்

என்பது கவிஞன் வாக்கு.

தனக்கு ஒப்பு ஒன்றுமே இல்லாத நரசிங்க மூர்த்தி செந்தாமரை மீது மிக்க களிப்புடன் வீற்றிருக்கும் தூண்டாமணி விளக்குப் போன்ற திருமகள் என்ற சுயம்பிரகாசமான ஜோதியை நோக்குகிறானும். பரிமளம் கமழும் அழகின் கொழுந்தை—என்றும் இளம் கொழுந்தை—நோக்குகிறானும். ஆதியில் உலகங்களையும் உயிர்களையும் முறை முறையே பெற்றருளிய பெரிய பிராட்டியை நோக்குகிறானும். சத்தியம் அழகை நோக்குகிறது. இந்த நோக்கிலே பிரகலாதன் ரட்சிக்கப்படுகிறான். தேவர்கள் ரட்சிக்கப்படுகிறார்கள். உலகம் ரட்சிக்கப்படுகிறது.

இத்திருமகளை—பெரிய பிராட்டியார் என்று வைணவர்கள் போற்றும் இந்த உலக அன்னையை—'உலகு ஈன்ற தெய்வம்' என்கிறுன் கவிஞன். தாயாகிய இத்தெய்வத்தைச் சிங்கப்பிரான் காதலால் நோக்குகிறுன் என்றும், அது கண்ட முனிக்கணங்கள் திருமாலின் திருப்புகழை ஓதுகிறுர்கள் என்றும் கூறி இப்பகுதியை முடிக்கிறுன்.

கிருஷ்ணுவதாரத்தில் ருக்மிணி தேவியே மகாலட்சுமியின் அம்சம் என்பர். ருக்மிணி சமேதராகக் கண்ணன் சாதுக்களை ரட்சிக்கக் காண்கிறேம். குற்றங்களைக் கண்டு நம்மைக் கைவிடாமல் இருப்பதற்குக் காரணமான அருளைத் தந்தையான இறைவனிடம் உண்டாக்க வல்லவள் பிராட்டியாகிய லட்சுமி. இந்த லட்சுமி ராமாவதாரத்தில் சிதையாகவும், கிருஷ்ணுவதாரத்தில் ருக்மிணியாகவும் எம்பெருமானை விட்டு நீங்காமல் இருந்தாள் என்பது இதிகாச புராணங்களின் கொள்கை.

### லட்சுமியும் ஸ்ரீ வைஷ்ணவமும்

ஸ்ரீ என்றுல் திரு அல்லது லட்சுமி. லட்சுமி சம்பந்தம் உடைய சமயம் ஸ்ரீ வைஷ்ணவம் என்று சொல்லப்படுகிறது. புராண பாஷையில், லட்சுமி திருமாலின் மார்பைவிட்டுப் பிரிவதில்லை. இதன் உட்பொருள் என்ன? சத்தியத்தின் இதயத்திலுள்ள அழகே அருளாகி வாழ்விக்க வல்லது. உள்ளழகே உண்மையழகு. சுருங்கச் சொன்னுல் உண்மையே அழகு; இவ் அழகே உண்மை.

ராமன் சீதாராமனுக அருள் செய்வது போல் கண்ணன் ருக்மிணி கிருஷ்ணனுக அருள் செய்வதையும், உக்கிர நரசிங்கம் லட்சுமி நரசிம்மனுக அருள் செய்வதையும் காண்கிறேம். அடியவருடைய குற்றங்களைப் பாராது ரட்சிக்கும்படி இவள் சேர்ப்பித்தால் ஒழிய இறைவன் அடியவர்களுடைய காரியத்தைச் செய்வதில்லை என்கிறது ஸ்ரீ வைஷ்ணவம். மகாலட்சுமிக்கு முதற் பெயர் ஸ்ரீ என்றும் வைணவ அறிஞர்கள் கூறுவர்.

குற்றம் கண்டதும் தர்மமூர்த்தியாகிய இறைவனுக்கும் தருமாவேசமாகிய கோபம் ஏற்படத்தான் செய்கிறது. ஆனுல் இந்தத் தெய்வ கோபம் 'நீரிலே நெருப்பு கிளருமா போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே' பிறக்கிறது என்பர். இப்படிச் 'சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக (திருமகளுக்காக)!' என்று வைணவப் பேரறிஞர்கள் கூறுகிறுர்கள்.

பத்துமாதம் அசோகவனத்தில் சிறைப்பட்டிருக்கையில் அந்த வனத்தில் அரக்கிமார் சீதாபிராட்டியை எவ்வளவு கொடுமையாக நடத்தினுர்கள்! அது கண்டு அந்த அரக்கிமாரைச் சித்திர வதை செய்ய வேண்டுமென்று பிடிவாதம் செய்தானும் அனுமன். அந்தக் கோபத்தையும் மாற்றி 'நீ பொறுத்துக்கொள்ள வேணும் அப்பா!' என்று சொல்லி அரக்கிமாருக்கும் அருள் புரிந்தாள் சீதா

லட்சுமி. இத்தகைய லட்சுமி தான் சொன்ன வண்ணம் செய்பவனுகிய எம்பெருமானைப் பொறுத்துக்கொள்ளச் செய்வாள் என்பதில் என்ன ஐயம் இருக்க முடியும்? இது வைணவர்களின் மனநிலை.

கிருபையே ஒரு வடிவு கொண்டாற்போல் இருப்பவள் மகாலட்சுமி. காகாசுரனுக்கும் கிருபை புரிந்தாள் என்ருல், லட்சுமியின் கிருபைக்கு எல்லையே இல்லை என்று சொல்லவா வேண்டும்? லட்சுமி கடாட்சம் இல்லாத திருவிலியாகவே வாழ்க்கை முழுவதும் கழித்து விட்டதால்தான் ராவணன் ராம பாணத்திற்கு இலக்காய் முடிந்து போனுன். இப்படியெல்லாம் லட்சுமி கடாட்சத்தை வற்புறுத்துகிறது வைணவம்.

★

திருமாலே திருமகளின் கடாட்சத்தால் தன் உயர்ந்த பதவியை எய்தப்பெற்றிருக்கிருன் என்று கூடக் கவிஞர்கள் பாடியிருக்கிருர்கள். லட்சுமி கடாட்சம் உள்ளவர்களுக்குச் சேராதன இல்லை என்று கூறுவோர் திருமாலின் ஒப்பற்ற நிலையையும் இக்கடாட்சத்திற்கு நிகரற்ற சான்ருகக் காட்டுகிருர்கள். லட்சுமியின் கடைக்கண் அருளைப் பெற்றவர்களே பெரும் பெரும் பதவிகளைப் பெறக் கூடும் என்ருல், மகாலட்சுமியை மார்பிலே வைத்துக்கொண்டிருக்கும் திருமாலின் பாக்கியத்தைச் சொல்லவா வேண்டும் என்பது பக்தர்களின் மனநிலை.

திருமாலுக்கு எத்தனை திருப்பெயர்கள் இருக்கின்றன! அரசர்களே ஒவ்வொருவரும் பல பெயர்களை வைத்துக் கொண்டார்கள் என்று சரித்திரம் தெரிவிக்கிறது. திருமாலுக்கு ஆயிரம் பெயர்கள் என்று புராணம் சொல்லுகிறது. ஆயிரம் என்ருல் அனந்தம் என்பது பௌராணிகர் கருத்து. இத்தகைய ஆயிரம் பெயர்களை வேதங்களும் குறிப்பிடுகின்றனவாம். பக்தர்கள் உகந்த பெயர்கள் எல்லாம் பகவான் உகந்த பெயர்களே என்பர்.

பட்டப் பெயர்களை 'அரசாங்கக் கெஜட்'டில் வெளியிட்டால் தான் பெருமை: அப்படியே வேதம் செப்பும் பெயர்கள் ஆயிரம் திருமாலுக்கு! இந்தப் பெயர்கள் எல்லாம் லட்சுமி கடாட்சத்தால் கிடைத்த பாக்கியம்தானும்.

எந்த முடிமன்னனுக்கும் ஒரு முடி அல்லது கிரீடம்தான் உரியது. ராவணன் பத்துத் தலையன் ஆனதால் பத்து முடிகளைச் சூட்டிக்கொண்டானும். இறைவனே ஆயிரம் சிரங்களில் ஆயிரம் கிரீடங்களை உடையவன் என்பர். சர்வலோக ஆட்சிக்கு அறிகுறியான இந்த அனந்தமான கிரீடங்களும் மகாலட்சுமியின் கடாட்சத்தால் கிடைத்தவை தாம் என்று கவிகள் பாடுகிருர்கள்.

முடிமன்னர்கள் மாலைகளும் அணிந்திருப்பார்கள், தங்கள் பதவிகளுக்கு இசைந்தவாறு; அப்படியே திருமால் ஆயிரம் துளசி

மாலைகள் அணிந்திருக்கிறுனும். இந்தப் பாக்கியமும் லட்சுமி கடாட்சத்தால் வந்த பாக்கியம்தான் என்று கவிஞர் பாடியிருக்கிறர்.

எல்லாவற்றுக்கும் மேலாக, சடகோபருடைய ஆயிரம் பாடல்களையும் திருமால் பெற்றிருக்கிறன் திருமகளின் அருளால் என்று பாடி முடிக்கிறர் ஒரு கவிஞர். 'நம் திருக்குருகூர்ச் சடகோபன் சொன்ன ஆரா அமுதக் கவி ஆயிரம்' என்று நம்மாழ்வார் பாடல்களை இக் கவிஞர் சிறப்பித்துப் பேசுகிறர்.

பட்டப் பெயர்களுக்கு மேல் கிரீடங்கள்; கிரீடங்களுக்குமேல் முடி மாலைகள், எல்லாவற்றுக்கும் மேலாக ஆழ்வாரின் அமுதத் தமிழ்ப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன திருமாலுக்கு என்று பாடும் இத் தமிழ்க் கவிஞர் 'லட்சுமி சேர்ந்திருக்கும்போது சேராதன உளவோ?' என்ற பீடிகையுடன் தம் கருத்தை வெளியிடுகிறர்.

## 4. பெருந்தேவித் தாயார்

மகாலட்சுமியைப் பெரிய பிராட்டி என்று குறிப்பிடுவதுபோல் பெருந்தேவித் தாயார் என்றும் குறிப்பிடுவதுண்டு. செந்தாமரையாள் என்றும் போற்றுகிறேம். சூரியோதயத்தில் செந்தாமரை மலர்ச்சி பெறுகின்ற இயற்கை யதிசயத்தை ஊடுருவிப் பார்த்தால், செந்தாமரையாள் சூரிய நாராயணனைக் காதலிப்பதும், சூரிய மண்டலத்தின் அதிதேவதையான அந்த நாராயணன் செந்தாமரைப் பெண்ணைக் காதலிப்பதும் உள்ளுணர்விற்கு இனிது புலனுகும். இந்த நித்திய கல்யாணக் காட்சியிலே மகாலட்சுமிக்கும் மகாவிஷ்ணுவுக்கும் இடையே உள்ள காதலும் ஒருவாறு உணரப்படும் எனலாம்.

உலகுக்கெல்லாம் தந்தையாகிய பெருமாளுக்கும் தாயாகிய பெரிய பிராட்டிக்கும் உலகனைத்தும் மக்கள். தெய்வ தம்பதியின் சேர்த்தியே உலகத்திற்குத் தஞ்சம் என்பர். பெருமாள் அவதரிக்கும் போது பெரிய பிராட்டியும் அவதரிக்கிறுள் என்றும், இவளுடைய அவதாரங்களும் பல என்றும் சொல்லுகிறர்கள். உலகத்தின் க்ஷேமத்தை நன்கு கருதுகின்றுள் பெருமாளின் தருமத் துணைவியாகிய மகாலட்சுமி. எனவே இவளை முன்னிட்டு இறைவனைச் சரணமடைய வேண்டும் என்கிறர்கள்.

ஆதிமறை தொடக்கமாகப் பல நூல்களிலும் தாயார் விஷயமான தோத்திரங்களும் காணப்படுகின்றன. வைணவ ஆசிரியர்களான ஆளவந்தார், கூரத்தாழ்வான், பராசரபட்டர், வேதாந்த தேசிகர் முதலானவர்கள் இயற்றியுள்ள லட்சுமி ஸ்தோத்திரங்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. திருப்புகழ்ச் சுவாமிகளும் திருமகள் அந்தாதி என்ற ஒரு நூல் இயற்றியிருக்கிறர்.

## தாயாரும் தேசிகரும்

வேதாந்த தேசிகர் இயற்றியுள்ள ஸ்ரீ ஸ்துதியில் தாயாரின் அவதார வைபவம் குணாதிசயங்கள் முதலியன கூறப்பெற்றிருக்கின்றன. வேறொரு கதியும் இல்லாத அடியேன் எண்ணிறந்த அருமை பெருமைகளை உடையவளும், இறைவனுடைய திருமார்புக்கு அணியாக இருப்பவளும் ஆகிய ஸ்ரீதேவியைச் சரணமடைகிறேன் என்று தொடங்குகிறது இந்தநூல்.

திருமகள் பாற்கடலிலும் யாக பூமியிலும் அவதரித்தாள் என்று தேசிகன் கூறியுள்ளார். செந்தாமரையிலும் திருமாலின் திருமார்பிலும் உறைகின்றாள் என்கிறார். அகில உலகங்களும் பரமபதமும் இவளுடைய செல்வம் என்கிறார். 'எல்லை காண முடியாத குணங்களையுடைய உம்மை அற்ப அறிவுள்ள நாங்கள் உள்ளபடி எவ்விதமாகத்தான் துதிக்க முடியும்?' என்று தேவியையே கேட்கிறார். துதிக்க நினைத்த பொழுதே சித்தி பெற்றதாகவும், திருமகளின் அடிகளில் பணிபுரிய வேண்டும் என்ற ஆசையே பல நன்மைகளை அளிக்கும் என்றும் சொல்லுகிறார்.

பகவானும் லட்சுமி தேவியின் தொடர்பினாலேயே பிரகாசிப்பதாக இவரும் ஒப்புக் கொள்ளுகிறார். தடை இல்லாத விசுவாசத்தால் லட்சுமியும் திருமாலும் ஒன்று சேர்ந்திருப்பதாகவும், இத்தம்பதி ஆதிசேஷனாகிய படுக்கையை விரும்புவதுபோல் தூய உள்ளங்களையும் விளையாடுவதற்கு உரிய களன் ஆக்கிக் கொள்கிறார்களாம். இந்தத் தம்பதி விளையாட்டாக ஆடும் சொக்கட்டான் ஆட்டம்தான் ஆக்குதல் அளித்தல் அழித்தல் ஆகிய முத்தொழிலும் என்கிறார்.

உருக்கி ஓடவிட்ட தங்கம்போல் ஒளியை உடையது மகாலட்சுமியின் ஆதி உருவம்; இது மரகதம்போன்ற திருநிறம் உடைய பகவானுடைய திருமேனியில் ஒரு விசேஷ அழகை உண்டாக்குகிறதாம். இத்தேவியின் சங்கற்பத்தினாலேயே கலைமகள் வார்த்தையாக உலகமெங்கும் பரவி இருக்கிறாளாம்; மலைமகளான பார்வதி யோகீசுவரனை தன் காதலனைத் தன் மீது காதல்கொள்ளச் செய்தாளாம். தேவேந்திரனை இந்திராணி தன் வசம் ஆக்கிக் கொண்டதும் மகாலட்சுமியின் சங்கற்ப லேசத்தால் ஏற்பட்டது தானாம்.

இப்படியெல்லாம் பாடிவரும் ஸ்ரீ வேதாந்த தேசிகன் மகாலட்சுமியின் அவதாரக் காட்சியையும் கதையும் சுட்டிக் காட்டுகிறார். அமிர்தப் பெருக்கையுடைய பாற்கடலிலிருந்து அவதரித்தவள் பெருமாளுக்கு எதிரே தாமரைப்பூவில் வீற்றிருந்ததையும், அப்போது ஏழு மேகங்கள் பூமாரி பொழிந்ததையும், திக்குயானைகள் பொற்குடங்களில் அந்தப் பூமாரியை மொண்டு லட்சுமிக்குத் திருமஞ்சனம் செய்ததையும் தேசிகனும் சித்திரித்துக் காட்டுகிறார்.

லட்சுமி அவதரித்துப் பகவானுடைய திருமார்பை அடைந்த பிறகு நேர்ந்த துர்வாச சாபக் கதையையும் சுட்டிக்காட்டுகிறார். அந்தக் கொடிய முனிவரின் சாபத்தால் மூவுலகங்களையும் இழந்து தேவர்கள் தவித்ததாகவும், அவர்களுடைய மனைவிமார் லட்சுமியைச் சரணமடைந்ததாகவும், அப்போது இந்தத் தாயார் கண்களால் அருளியதாகவும், அதனால்தான் தேவர்கள் மூன்று உலக உரிமைச் செல்வத்தை மறுபடியும் அடைந்து நாளதுவரை அனுபவித்துக்கொண்டு வருவதாகவும் சொல்லுகிறார் தேசிகன்.

கஷ்டப்படுகிறவர்களைக் காப்பாற்றுவது என்றே உறுதி கொண்டிருக்கிறாளாம் இந்த அன்னை. இப்பொழுதுதான் மலர்ந்தன இச் செந்தாமரை மலர்கள் என்று சொல்லும்படி ஒளிரும் கண்களால் தாயார் கடாட்சித்ததும், அந்தத் திக்கை நோக்கி 'நான் முன்னே, நான் முன்னே!' என்று போட்டி போட்டுக்கொண்டு ஓடுகின்றனவாம் செல்வங்கள். பூமி வானம் கடல் குபேரனுடைய பொக்கிஷச்சாலை முதலிய இடங்களிலிருந்து பொருள் தாரை தாரையாக வருகின்றதாம்.

இம்மை மறுமை என்ற இருவகைச் செல்வங்களையும் அருளுகிறாள் லட்சுமி என்ற உலக அன்னை. எனவே, 'தாயே! அகில நன்மைகளையும் அடைவதற்காகவும், எல்லாப் பாவங்களையும் போக்கிக் கொள்வதற்காகவும், தூய உள்ளம் உடையவர்கள் உம்முடைய தயவைத்தான் கதியாகப் பற்றிக் கொள்ளுகிறார்கள்' என்கிறார் தேசிகன்.

எல்லா மங்களங்களுக்கும் நாசம் இல்லாத உறைவிடம் என்றும், தயைக்கு எல்லை நிலம் என்றும், மறைகளுக்குச் சூடாமணி என்றும், மக்களுக்குக் காமதேனு என்றும் மகாலட்சுமியைக் குறிப்பிடுகிறார் தேசிகன். கலியின் கொடுமையைப் போக்கத் தக்கது என்ற பலச்ருதி சுலோகத்துடன் முற்றுப்பெறுகின்றது இந்த நூல்.

### பெருந்தேவித் தாயார் மாலை

அத்திகிரித் திருமால் என்ற அருளாளப் பெருமானின் (வரதராஜப் பெருமானின்) தேவியாரைப் பெருந்தேவித் தாயார் என்று சிறப்பித்துப் பேசுவதுண்டு. அத்திகிரி அருளாளரின் சித்திரமணி மார்பில் அமர்ந்திருக்கும் ஆபரணம் என்றும், அதிகுண பாக்கியவதி என்றும், செல்வ மயில் என்றும் இத்தேவியாரை வருணிப்பதுண்டு. 'கச்சியமர் துரைப் பெண்' என்றும், வரதராஜப் பெருமாளின் கண்ணினுள் பாவை என்றும் இத்தேவியாரைக் குறிப்பிடுவதும் உண்டு.

இப்பெருந்தேவித் தாயாருக்கு ஒரு பாமாலை சூட்டியிருக்கிறார் யதிராஜதாசர் என்ற ஒரு பக்தர். நம்மாழ்வார்மீது இவர் பாடியிருக்கும் காப்புச் செய்யுள் நீங்கலாக இந்த நூலில் நூறு பாடல்கள் உண்டு. இந்த நூலுக்குப் பெயர் பெருந்தேவித் தாயார் மாலை

என்பது. (இது திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கத்தின் அறுபதாவது வெளியீடாகப் பிரசுரிக்கப் பெற்றிருக்கிறது.)

இந் நூல் இத்தேவியாரை அருளின் கடல் என்றும், அழகின் கடல் என்றும், அறத்தின் கடல் என்றும், கவியின் கடல் என்றும், கலையின் கடல் என்றும், ஒளியின் கடல் என்றும் போற்றுகிறது. இத்தகைய தேவியாரை உளமாகிய கடலில் வைத்து உவக்கின்ரும் என்கிருர் இப்புலவர்.

குவிக்கும் புகழ்ப்பெருந்
தேவிகல்யாண குணகணமே

செவிக்கும் அமுதம், தம் கவிக்கும் அமுதம், தெவிட்டாத அமுதம் என்கிருர்.

பெருந்தேவி ராணி என்றும், பெருந்தேவி இறையவள் என்றும் இப்பிராட்டியைப் பாடுகிருர். 'பெருந்தேவித் தாயாம் அருள் நிதியே!' என்று விளித்துப் போற்றுகிருர்.

அந்தரங் கப்பணி
செய்துய்யும் வண்ணம்
அருள்புரியே

என்று பிரார்த்திக்கிருர்.

அத்திகிரியில் கோயில் கொண்டிருக்கும் தேவியானதால் 'வாரண மாமலை வாழ்பெருந்தேவி' என்கிருர். விருப்பங்களையெல்லாம் அருளும் தேவியானதால் 'பெருந்தேவி என் கற்பகமே!' என்று விளித்துப் போற்றுகிருர். மெய்யுணர்வை அளிக்கும் அன்னையானதால் 'சிந்தையில் செம்பொருள் தேர் உணர்வாம் பெருக்கு அளித்து ஆளும் பெருந்தேவி எங்கள் பெருந்தனமே' என்று பாடுகிருர்.

★

பெருந்தேவித் தாயாராகிய திருமாமகளை வழிபடுவோருக்குப் பொய்யாத உள்ளம் வேண்டும், அப்போதுதான் இவ்வுலக அன்னை உள்ளபடியே அருள் புரிவாள் என்ற கருத்து நீண்ட காலமாக நமது நாட்டில் நிலவி வந்திருக்கிறது என்று கருதலாம்.

நெய்யொடு திரிஒக்கச்
செய்யாளைச் சேர்வார்க்கு,
பொய்யாத உள்ளமே
மெய்யாதல் வேண்டுமே

என்பது ஒரு பழைய புலவர் வாக்கு.

பொய்யாத உள்ளம் வேண்டும் என்பதை இப்புலவர் இங்கே அழுத்தமாக வற்புறுத்தியிருக்கிருர். நெய்யோடு திரியும் சேர்ந்து

எரிவது போல் செய்யாளைச் சேர்ந்து வாழ்க்கையை ஒளிமயமாக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும் இவர் வற்புறுத்துகிறார். இங்கே திருமகள் 'செய்யாள்' என்று குறிக்கப்படுகிறாள். செம்மேனியளான திருமகள் செம்மனச் செல்வி என்பதும், அத்தகைய மனச் செல்வமே இவள் செம்மேனியாகவும் பிரதிபலிக்கிறது என்பதும் குறிப்பு.

இப்படித் திருமகளை ஆராதிப்பவர்கள் தனிமையாகத் தாயாரை மட்டும் வணங்கி வழிபடுவதில்லை.

மணிவிளங்கு திருமார்பின்
மாமலராள் வீற்றிருப்ப,

இத்தேவியாருடன் கூடிய மாலோனை வழிபடுவார்கள்.

இக்கருத்தைத்தான் 'ஒண் தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' என்ற ஆழ்வாரின் வாக்கு இனிது புலப்படுத்துகிறது. ஆனால் இறைவனும் 'தாமரையாள் கேள்வன்' என்று புகழப் பெறுவதால் பெருந்தேவித் தாயாரின் புகழ்தானே மேலும் உறுதிப்படுகிறது?

# 5. மகாலட்சுமியும் ஸ்ரீரங்கநாயகியும்

திருமாமகளை ஸ்ரீ ரங்கநாயகியாக வழிபடுவதில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஒரு விசேஷ திருப்தி உண்டு. ஸ்ரீ ரங்கநாச்சியார் விஷயமாக ஸ்ரீ பட்டர் என்று பிரசித்தமாக இருக்கும் பராசர பட்டர் அருளிச் செய்திருக்கும் ஸ்ரீ குணரத்ன கோசம் என்ற வடமொழிப் பிரபந்தம் உண்டு. இந்த ஆசிரியர் கூரத்தாழ்வானின் அருமைப் புதல்வர்; கூரத்தாழ்வான் என்ற கூரேசனே ஸ்ரீ ராமானுஜரின் அந்தரங்க சீடர். எனவே குணரத்ன கோசத்தில் மகாலட்சுமியைப் பற்றிய வைணவக் கொள்கைகளின் சாரத்தைக் கண்டு கொள்ளலாம் எனக் கருதுவது பொருத்தமே.

குணரத்ன கோசம் கம்பீரமான நடையில் அமைந்திருக்கிறது. இந்த நூலில் பொருளின் ஆழத்திற்கு ஏற்ற சொல்லழகையும் காணலாம். இதன் அற்புத நடையே இவ்வாசிரியர் ஸ்ரீ ரங்கநாச்சியார் என்ற பெரிய பிராட்டியாரின் விசேஷ அருளைப் பெற்றிருப்பதற்கு ஒரு சான்றாகும் என்பது வைஷ்ணவ பக்தர்களின் கருத்து. இந்நூலுக்குக் காஞ்சி மகாவித்வான் ஸ்ரீ அண்ணங்கராசாரியார் தமிழில் ஓர் அருமையான வியாக்கியானம் இயற்றியிருக்கிறார்.

குணரத்ன கோசத்தின் ஒரு சுலோகத்திலே தமக்கு நல்ல வாக்கு வளத்தை அருளவேண்டுமென்று திருமகளை இவ்வாசிரியர் பிரார்த்திக்கிறார். இதனால் வாக்கு வளத்தைக் கலைமகளைப்போல்

திருமகளும் அருள வல்லவள் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். அழகுத் தெய்வமும் அருளரசியுமான திருமாமகளின் கடாட்சத்தி னுல் அழகிய அருள்வாக்கும் வாய்த்துவிடும் என்று அன்பர்கள் நம்புவது பொருத்தம்தான்.

திருமகளின் குணங்களாகிய இரத்தினங்களுக்கு இந்த நூல் ஒரு பொக்கிஷமாக அமைந்திருப்பதால் இதற்குக் குணரத்ன கோசம் என்று பெயர் இடப்பெற்றிருக்கிறது. மகாலட்சுமியின் குணங்கள் எல்லாம் அழகான மங்களமான கல்யாண குணங்கள். இந்த நூலில் பிரஸ்தாபிக்கப் படாத திருமகளின் குணங்களை வேறு எந்த நூலிலும் காண முடியாது என்று கருதுவோர் உண்டு.

பட்டர் பெருமாள் விஷயமாக ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் என்ற நூலை இயற்றிய பிறகே இந்த லட்சுமி ஸ்துதியை இயற்றியிருக்கிறுர். ஆனுல் பிராட்டியைத் தொழுது முன்னிட்டுக்கொண்டே பெருமாளைத் தொழவேண்டும் என்பது வைணவர் மரபு. ஆகவே இவர் பிராட்டியை மானஸீகமாகத் தொழுது ஸ்ரீ ரங்கநாதன் விஷயமான தோத்திர நூலை இயற்றினுர் என்றும், பிறகு தாம் முற்படத் தொழுத மகாலட்சுமி விஷயமாக இந்தக் குணரத்ன கோசத்தை இயற்றினுர் என்றும் கருதுவது பொருந்துவதே.

## திருமகளின் குணரத்னங்கள்

கல்யாண குணங்கள் பகவானுக்கு ஆபரணங்கள் என்றும், சீதாலட்சுமிக்கோ திருமேனியின் இன்றியமையாத பகுதி என்றும் கம்பன் யுத்த காண்டத்தில் தன்னுடைய தேர்ந்த கொள்கைகளில் ஒன்ருகக் கூறியுள்ளான். எனவே தன்னுடைய கருணை நோக்கிஞலே தன்னை அடைவோரைப் பிராட்டி கடைக்கணித்து அங்கீகரித்து அருளுவதைத் தன் சிறப்பியல்பாகக் கொண்டிருக்கிருள் எனலாம்.

இத்தகைய குணரத்தினங்களின் இயற்கை ஒளியால் ஸ்ரீரங்க நாயகி ஸ்ரீரங்க விமானத்தின் அருகே ஏற்றிவைத்த மங்களத் திருவிளக்கைப்போல் விளங்குகிருளாம். ஸ்ரீரங்க ராஜாவின் ராணி என்றும், ஸ்ரீரங்கநாதன் என்ற கற்பகத்தில் படரும் கொடி என்றும் பட்டர் சொல்லுகிருர். பொதுவாக ஒரு மரத்தில் படரும் கொடி அம்மரத்தை அபிவிருத்தி செய்வதில்லை; தானே அபிவிருத்தி அடைகிறது. ஆனுல் திருமாமகள் என்ற கொடி தன்மேல் படர எண்ணியதுமே ஸ்ரீரங்கராஜா என்ற தரு 'பண்ணப் பணைத்த' பெருஞ் செல்வமாய்த் தழைத்து விடுகிறதாம்.

திருவரங்க நாயகி அமுதப் பெருக்கான தனது பார்வையால் தம்மை முழுக்காட்ட வேண்டுமென்று பிரார்த்திக்கிருர் பட்டர். 'நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்!' என்பது போன்ற பெரும் பணிவுடன் பிரார்த்திக்கிருர். தம் தோத்திர முயற்சிகளை மழலைச் சொல்லாகக் கொண்டு தாய் மிக்க பிரீதி அடைவாள் என்று நம்புகிருர்.

தம்முடைய கவிதை தாயின் குணங்களை விவரிப்பதால் மேன்மை பெறும் என்பதில் ஐயமில்லை என்கிறார்.

தம்முடைய வேண்டுகோள் இல்லாமலே ஸ்ரீரங்க நாச்சியார் அநுக்கிரகம் செய்யக்கூடிய கருணை வாய்ந்தவள் என்பதிலும் இவருக்கு ஐயப்பாடு கிடையாது. அப்படியிருக்க, இவர் பிரார்த்தனையும் அன்னையின் திருச்செவிகளில் விழும்போது, 'மேலும் கேட்கவேணும், கேட்கவேணும்!' என்று ரசிகர்கள் விரும்பத்தக்க நிலையில் பிராட்டியின் கிருபையால் தம் சுலோகங்கள் அமைந்துவிடும் என்பதில் பட்டர் ஐயம் கொள்ளவேயில்லை. கேட்பார் நெஞ்சு கனிவிக்கும் தோத்திரங்கள் பிறரையும் திருத்திப் பிராட்டியின் கருணைக்கு இலக்காக்கும் அல்லவா?

இத்தகைய பீடிகையுடன், மகாலட்சுமியின் கலியாண குணங்கள் வேதங்களில் மிகவும் விளங்குகின்றன என்று பொருள்படப் பேசுகிறார். வேதத்தின் ஒரு பகுதியான ஸ்ரீஸூக்தம் திருமகளின் குணங்களைக் கூறுகிறது என்பது பிரசித்தம். ஆனால் வேதங்கள் பொதுவாகப் பகவானுடைய கலியாண குணங்களையல்லவா பேசுகின்றன என்ற கேள்விக்கு விடை பகவானுடைய பெருமை எல்லாம் பிராட்டியின் பெருமையும்தான் என்று சொல்லக்கூடும். வைணவர்களோ பெருமாளின் பெருமை எல்லாம் பிராட்டியினால் தான் என்றுகூடத் துணிகிறார்கள்.

வேதமாகிய பெட்டியில் பிராட்டியின் குண ரத்தினங்கள் காணப்படுகின்றன என்பது பட்டர் கருத்து. விலை உயர்ந்த இரத்தினங்களை வைத்திருக்கும் பெட்டி பூட்டப்பெற்றிருக்குமல்லவா? பூட்டைத் திறக்கத் திறவுகோல் வேண்டுமே: இதிகாச புராணங்களைத் திறவுகோலாகச் செய்து கொடுத்திருக்கிறாராம் வியாச மாமுனிவர். இந்தத் திறவுகோலைக் கொண்டு திறந்து பார்த்தால், இறைவனுக்குச் சொல்லியிருக்கும் பெருமைகள் எல்லாம் பிராட்டிக்கும் பொருந்தும் என்பது தெரியவரும். ராமாயணம், விஷ்ணு புராணம் முதலியவற்றைக் கொண்டே வேதப் பொருளை நிச்சயிக்க வேண்டும் என்பது வைணவர் கொள்கை.

வேத வேதாந்தங்களிலே மறைந்து கிடக்கிற திருமகளின் குண ரத்தினங்களைக் கண்டு களிப்பவர்கள் பாக்கியசாலிகள் என்பது பட்டர் கருத்து. இதனால் வேதங்கள் வெளிப்படையாக இறைவனுடைய குணங்களையும், குறிப்பாக இறைவியாகிய திருமாமகளின் பெருங்குணங்களையும் ஓதுகின்றன என்று கருதலாம். குறிப்புப் பொருளை நன்குணர்ந்து கொள்ளத்தான் இதிகாச ரத்தினமாகிய ராமாயணம் போன்ற நூல்களின் உதவி இன்றியமையாததாகிறது.

ராமன் கருணைக் கடல்தான்; எனினும் பிராட்டியைப் பிரிந்த நிலையில் ராமனது கருணை சோபிக்கக் காண்பது அரிது. தேவியைப் பிரிந்த நிலையில் சித்தம் திகைத்துத் தன்மீது ராமன் பாணம்

தொடுத்ததாக வாலி (கம்ப ராமாயணத்தில்) கூறி யிருப்பதும் கூர்ந்து நோக்கத் தக்கது. இந்த நிலையில் ராமாயணம் ராமனது ஏற்றத்தைக் காட்டிலும் சீதாலட்சுமியின் ஏற்றத்தைச் சிறப்பாக வெளியிடுகிறது என்று கருதுவதில் தவறென்றுமில்லையே. ஆகவே இத்தகைய திறவுகோலைக் கொண்டு வேத பொக்கிஷத்தையும் திறந்து பார்க்க வேண்டும் என்பது பட்டர் கருத்து.

உலகத்தில் எது நல்லது என்று கருதப்படுகிறதோ, அது திருமகளின் கடாட்ச லேசத்தால் அந்த நன்மையைப் பெற்றிருக்கிறது என்ற கருத்தையும் திருமகளின் குணரத்தினங்களைக் கண்டு கொள்வதற்கு உரியதோர் அடிப்படைக் கருத்தாக வெளியிடுகிறார் பட்டர். உலகில் அவரவருக்குக் கிடைக்கிற செல்வங்களெல்லாம் மகாலட்சுமியின் கடாட்சத்திற்கு உட்பட்டதே என்றும் கூறுகிறார். உலகம் புகழும் குணவானாக ஒருவன் விளங்குவதற்கும் அறிவில் சிறந்தவனாய் இருப்பதற்கும் பராக்கிரம சாலியாய் இருப்பதற்கும் திருமகளின் அருள் தேவை என்று கூறி, இந்த அழகுத் தெய்வத்தின் குணரத்தினங்களே உலகத்தை வாழ்விக்கின்றன என்கிறார்.

திருமகளின் முகமலர்ச்சியையே பேறாக உடையவன் திருமால் என்ற கருத்தையும் பட்டர் வெளியிடக் காண்கிறோம். இந்தப் பாக்கியத்தினால்தான் பல்லாயிரம் அண்டங்களையும் படைத்துக் காத்த ருளுகிறானும் பெருமான். பெருமானின் முத்தொழில்-விளையாட்டை லீலா விபூதி என்று வைணவர்கள் கூறுகிறார்கள். எவருடைய லீலை அல்லது திருவிளையாடல்? திருமகள் திருமால் என்ற திவ்ய தம்பதியின் லீலை என்பது விடை. எனினும் இத்திருவிளையாட்டு முக்கியமாகத் திருமகள் என்ற பிராட்டியின் லீலை என்பது பட்டர் கருத்து. பகவான் தன்னுடைய தேவியாகிய திருமகளுக்கு ஒரு லீலாரசம் காட்டவே முத்தொழிலையும் ஆற்றி வருகிறான் என்ற கருத்தையும் பட்டரின் குணரத்ன கோசத்தில் காண்கிறோம்.

பிராட்டியின் குணரத்தினங்களைக் குணரத்ன கோசம் என்ற இந்நூலில் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் காண்கிறோம். திருமகள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியதால், அப்போது உடன் பிறந்த சந்திரன் கற்பகம் அமிர்தம் முதலான பொருள்களிடமிருந்து அவற்றின் குணங்களாகிய மென்மை குளிர்ச்சி மோகன நிலை மதுரநிலை வண்மை ஆகியவற்றை ஸாரமாக எடுத்துத் திருமகளின் திருமேனியைப் பாற்கடல் படைத்துவிட்டதோ!—என்று கூறும் பட்டர் இயற்கைக்கு அதீதமான திருமேனியை அப்படி வருணிப்பது சரியன்று என்றும் முடிவு கட்டுகிறார்.

திருமகளின் குணரத்தினங்களுக்குக் கொள்கலமாயிருக்கும் திருமேனி வாக்கிற்கு உரியதன்று என்றே துணிகிறார். எனினும் வாக்கிற்கு எட்டாததையும் தம் அதிசய வாக்கினால் உணர்த்த முயல்கிறார். தன் திருவடிகளில் வந்து வணங்கும் தொண்டர்களுக்கு அருளவேண்டுமே என்று திருமுடி தாழ்ந்தவண்ணம்

குழைந்து நிற்கிறாளாம் திருமகள். இந்த நிலையில் திருமுக மண்டலம் தழைந்திருப்பதன் குறிப்பையும் உணர்த்த முயன்று அடியவர்களின் வருகையை எதிர்பார்த்தும், வந்து சேர்ந்தவர்களுக்கு அருள் செய்ய விரும்பியும் இருக்கிற இருப்போ இது என்று அதிசயிக்கிறார்.

பரமவிநயம் தோன்ற ஒடுங்கித் துவண்டு நிற்கும் நிலையையும் இத்தாயாரிடம் காண்கிறார் பட்டர். அடியவர்கள் விஷயத்தில் தன் மணவாளனை அநுக்கிரகம் செய்ய வேண்டுமென்று தூண்டுவதற்காக நிற்கும் நிலையோ இது என்றும் வியக்கிறார். மலர்ந்த செண்பகப் பூக்களின் மாலை போலவும் சொர்ண ரேகை போலவும் காணும் திருமேனியை வாய்கொண்டு வர்ணிக்க முடியாது என்ற கருத்தையும் பட்டர் வாக்கிலே காண்கிறோம்.

திருமாமகளின் கண்ணழகையும் சுட்டிக் காட்டுகிறார் பட்டர். பிராட்டியின் கடாட்ச லேசமே பிரமபதவி முதலியவற்றை அளிக்கும் என்றால், இந்தக் கண்ணோக்கத்தை முற்றும் பேசுவது சாத்தியமில்லையே என்கிறார். 'தாயாரே! உமது திருக்கண் நோக்கத்தால் அடியேனைக் காத்தருள வேணும்' என்கிறார். இரு கரையும் அழியப் பெருக்கெடுத்து வரும் கருணைவெள்ளம் மேட்டு நிலத்திலும் ஏறிப் பாயும் என்கிறார்.

பிராட்டியின் குணரத்தினங்கள் இந்தப் பிரபந்தத்திலே பல்வேறு வருணனைகளால் பெரும்பாலும் நம் ஊகத்திற்கு விடப் பெற்றிருக்கின்றன எனக் கருதலாம். பேரின்ப வெள்ளம் பெருகக் கைங்கரியம் என்ற செல்வத்தை அனுபவித்துக்கொண்டு இன்னும் ஒரு நூற்றாண்டு தேவியின் திருவடி நிழலில் வாழக் கடவோம் என்ற மனப்பான்மையில் இந்த நூல் முற்றுப்பெறுகின்றது. இதில் திருமாமகளைப் பற்றிய ஆழ்வார் - ஆசாரியர்களின் சாரமான கருத்துக்களைக் கண்டுகொள்ளலாம் என்பர்.

### திருவரங்க நாயகியாரின் சந்நிதி

திருமாலின் தலங்களில் மிக்க புகழ்பெற்று விளங்கும் திருவரங்கம் என்ற ஸ்ரீரங்கத்தின் வைபவத்தை அறியாதார் இல்லை. ஸ்ரீரங்கநாதனை மதுரகவி யாழ்வார் தவிர மற்ற எல்லா ஆழ்வார்களும் பாடியிருக்கிறார்கள். மதுரகவி யாழ்வார் தம் குருவாகிய நம்மாழ்வாரையே பாடி யிருக்கிறார் என்பது பிரசித்தம். ராமானுஜரைப் போல் சங்கரர் மத்வாசாரியார் முதலானவர்களும் வட இந்திய ஆசாரியர்களும் ஸ்ரீரங்க நாதனையும் ஸ்ரீரங்க நாயகியையும் வழிபட்டுப் பேறு பெற்றிருக்கிறார்கள்.

'தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்' என்று ஆழ்வார் பாடியிருக்கும் திருவரங்கத்தின் தோற்றம் குறித்துத் தல புராணத்திலே கதைகள் காணப்படுகின்றன. ஸ்ரீரங்க விமானம் அயோத்தியிலிருந்து விபீஷணனால் கொண்டு வரப்பெற்று ஸ்ரீரங்கம்

வந்து சேர்ந்தது என்பதைப் பலரும் அறிந்திருப்பார்கள். ஸ்ரீரங்க நாச்சியாரின் சந்நிதி வசந்த மண்டபத்திற்கு வடபுறம் அமைந்திருக்கிறது. இப்பிராட்டியைப் 'படி தாண்டாப் பத்தினி' என்று கூறுவதுண்டு. இவள் கோவிலுக்கு வெளியில் போவதில்லை; விழாக்கள் எல்லாம் இந்தச் சந்நிதிக்குள்ளேயே நடக்கின்றன. இந்தத் தாயாருக்கு முக்கியமான நவராத்திரி விழா சந்நிதி வாசலில் உள்ள மண்டபத்தில் நடக்கிறது.

மற்ற விழாக்கள் பிராகாரத்திலுள்ள மற்ற மண்டபங்களில் நடைபெறுகின்றன. பிராகாரத்தின் தென்மேற்கிலுள்ள மண்டபத்தில் பங்குனி உத்தர தினத்தில் ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்க நாயகியும் ஒரே ஆசனத்தில் வீற்றிருந்து சேவை அளிக்கிறார்கள். இது ஒரு சிறப்பான நிகழ்ச்சி. இந்தச் சேர்த்தியைத் தரிசிக்கும் மக்கள் தங்கள் ஆற்றலுக்கு ஏற்றவாறு திருவிளக்குச் சமர்ப்பித்தல் முதலிய பணிகளைச் செய்து வருகிறார்கள். பிராகாரத்திலுள்ள உயர்ந்த மண்டபத்தில் விஷ்ணு புராணக் கதைகள் சித்திரிக்கப் பெற்றிருக்கின்றன.

### ஆழ்வார்களும் ஸ்ரீரங்கநாயகியாரும்

ஸ்ரீ வைஷ்ணவக் கொள்கைகளை வெளியிட்டிருக்கும் ஆழ்வார்களின் பாசுரங்களில் திருமகளைப் பற்றி வரும் குறிப்புக்களெல்லாம் பெரும்பாலும் ஸ்ரீரங்க நாயகியாரைக் குறிப்பிடுகின்றன எனக் கருதுவது தவருகாது. முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் ஓர் இடைகழியில் சந்தித்து நள்ளிரவில் நெருங்கி நின்று, மொழி விளக்கு ஏற்றிய கதையைப் பலரும் கேட்டிருப்பார்கள். 'ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்ற அந்தக் கதை வைணவ சமயத்தின் இதயத்தையும், பொதுவாக இந்திய சரித்திரத்தின் இதயத்தையும் நமக்குச் சுட்டிக் காட்டுகிறதல்லவா?

பொய்கையாழ்வார் காலை வேளையில் நிகழும் இயற்கை யற்புதமாகிய சூரிய தீபம் குறித்துப் பாடி, அந்த வெளிச்சத்தின் உதவியால் அந்த நள்ளிரவில் தங்களை நெருக்கிக்கொண்டு மௌனமாக நின்ற இறைவனைக் கண்டுகொள்ள முயன்ருர். பூதத்தாழ்வார் ஒரு ஞானச் சுடர்விளக்கை ஏற்றினர். இருவரும் ஏற்றிவைத்த தீப ஒளியிலே இறைவனைக் கண்டு பாடத் தொடங்கினர் பேயாழ்வார்.

ஒரே ஜோதி வெள்ளமாகத் தெரிந்தது முதல் முதல். இரவு பகல், இன்று நாளை என்ற வரையறைகளைக் கடந்து பாயும் அந்த வெள்ளத்தின் நடுவிலே சுழித்த ஒரு சுழியிலிருந்து எழுந்தது ஓர் உருவம். கோடி சூரியப் பிரகாசம்; ஆனல் முகமண்டலமோ சந்திர பிம்பம்போல் குளிர்ந்து தோன்றியது. சந்திரிகைக்குள் சந்திரிகை போல் அரும்பியது இள நகை.

சங்கு சக்கரங்களுடன் காட்சியளித்தது அந்த அழகு மயமான உருவம். கல்யாண குணங்களெல்லாம் அந்த மேனியில் ஆடை

யாபரணங்களாகி ஒன்றுக்கொன்று அழகாலும் ஒளியாலும் மிஞ்சிக் கிடந்தன. ஒரு நீலமேகம் போலக் காணப்பட்ட அந்தத் திவ்ய மங்கள விக்கிரகத்தினிடையே மின்னற் கொடிபோலத் தோன்றினாள் மகாலட்சுமி. ஒரு சமயம் பொன் மயமாகவும் ஒரு சமயம் நவரத்தின மயமாகவும் ஜொலித்தது இப்பிராட்டியின் திருமேனி.

திருமாமகளுடன் தங்களுக்குக் காட்சியளித்த இஷ்டமூர்த்தியைப் பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூவரும் தொழுதார்கள். திருமாமகளை முன்னிட்டுப் பகவானை அவர்கள் தொழுத அந்த நள்ளிரவிலே ஸ்ரீவைஷ்ணவம் தமிழகத்தில் தன் முழு அழகுடன் உதயமாயிற்று என்று அறிஞர்கள் கருதுகிறார்கள்.

திருக்கண்டேன், பொன்மேனி
கண்டேன்!

என்று பாடத் தொடங்கினார் பேயாழ்வார். பகவானுடைய நீலமேனியையும் பொன்மேனியாகக் காட்டுகிறது மகாலட்சுமியின் பொன்னிற அழகு.

இப்படி முதலாழ்வார் மூவருக்கும் திருக்கோவலூரில் காட்சியளித்த பெருமாள் ஸ்ரீரங்கநாதன் என்றும், பிராட்டி ஸ்ரீரங்கநாயகி என்றும் கருதுவதில் தவறொன்றுமில்லை. திருமாலின் 108 திருப்பதிகளிலும் மிகச் சிறந்தது திருவரங்கம் தானே.

தாம் கருவில் இருக்கும்போதே ஸ்ரீரங்கத்தின்மீது பக்தி கொண்டிருந்ததாக இம்மூவருள் ஒருவர் பாடியிருக்கிறார். 'ஒண்தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' என்றும் இவர் பாடியிருப்பதால் இவர் கருதும் மகாலட்சுமி திருவரங்க நாயகிதான் என்று ஊகிப்பதும் பொருத்தம்தானே.

மேகத்தையும் மின்னலையும் பார்க்கும்போதெல்லாம் லட்சுமி-நாராயண மூர்த்தியின் வசீகர அழகு பேயாழ்வாரின் நினைவிற்கு வந்தது.

பொலிந்(து) இருண்ட கார்வானில்
மின்னேபோல் தோன்றி
மலிந்த திருஇருந்த
மார்வன்

என்று இவர் வருணிக்கும் லட்சுமி-நாராயண மூர்த்தி ஸ்ரீரங்க நாயகியும் நாயகனுமாக இருக்கக்கூடும் என்ற ஊகத்திலும் தவறு இல்லை.

திருமழிசை ஆழ்வார் பேயாழ்வாரின் சீடர். இவரும் திருவரங்கத்தில் விசேஷ பக்தி கொண்டு பாடியிருக்கிறார். இவருக்கும் ஸ்ரீரங்க பக்தி உண்டு என்று கருதலாம். இவரைப்பற்றி வழங்கும் ஒரு கதை இங்கே குறிப்பிடத் தக்கது.

ஒரு சமயம் இவரது அருமை பெருமைகளைக் குறித்துக் கேள்விப் பட்ட தீட்சிதர் ஒருவர் இவரைத் தம் வேள்விச்சாலைக்குள் அழைத் துக் கொண்டுவந்து முதல் இடம் கொடுத்து வணங்கி வழிபட்டா ராம். அது கண்ட வைதிகர்கள் வேள்வி கெட்டுப் போய்விட்ட தென்று சீறினார்கள். தீட்சிதர் மீதும் ஆழ்வார் மீதும் வசைமாரி பொழிந்தார்கள். தீட்சிதரால் அந்தத் துயரத்தைப் பொறுக்க முடிய வில்லை. நீறுபூத்த நெருப்பைப்போல் இருந்த ஆழ்வாரைப் பரிதாப மாகப் பார்த்தார்.

அந்தப் பார்வை சாம்பலை ஊதி உட்கனலை ஜொலிக்கச் செய்தது. அந்த ஜொலிப்பிலே ஆழ்வாருடைய மேனி அற்புதமாக மாறிவிட்ட தாம். கடல் பொங்குவதுபோன்ற ஒரு தோற்றம்: கடல் முழங்குவது போன்ற ஒலியும் கேட்டது. மேகம் ஒன்று மலை யுச்சியில் சாய்ந்து கிடப்பது போன்ற ஒரு தோற்றமும் ஏற்பட்டது. மேகம் மின்னிக் குமுறியது, பெருமழை பொழியப் போவதுபோல. ஏன் இத்தகைய தோற்றங்கள்? பகவான் அழ்வார் திருமேனியில் ஆவேசித்து விட்டானும். பாற்கடலோடும் அனந்த சயனத்தோடும் சங்கு சக்கரங்களோடும் மகாலட்சுமியும் தானுமாக வந்து தோன்றினானும். உடனே வேள்விச் சாலையில் இருந்தவர்கள் ஆழ்வார் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்களாம்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கம் தவிர வேறொரு திருப்பதியையும் பாடவே யில்லை. இவருக்கு ஸ்ரீரங்க நாயகிமீது அபாரபக்தி இருந்திருக்கக் கூடுமல்லவா? 'தன்பால் ஆதரம் பெருக வைத்த அழகன்' என்று இவர் ஸ்ரீரங்கநாதனைக் குறிப்பிடுகிறார். ஸ்ரீரங்கநாயகியோடு கூடிய அழகன் என்பதே குறிப்பு எனக் கருதலாம்.

அண்டர்கோன் அமரும்
சோலை

என்கிறார் திருவரங்கத்தை. திருவரங்கப் பூம்பொழிலில் அண்டர் கோன் அண்டங்களின் அன்னையாகிய ஸ்ரீரங்கநாயகியுடன் அமர்ந் திருக்கிறான் என்பது குறிப்பு.

ஸ்ரீரங்கநாதனைக் குறித்து இந்த ஆழ்வார் 'தந்தையும் தாயும் ஆவார்' என்று பாடி யிருக்கிறார். தாய் என்றதுமே ஸ்ரீரங்கநாயகி யின் நினைவுதானே வரக்கூடும். இப்படி இவரது பாடல்களில் ஸ்ரீரங்க நாயகியின் பிரஸ்தாபம் குறிப்பாகப் புலப்பட்ட போதிலும் இவரைப் பற்றி வழங்கும் கதையில் இந்தப் பிரஸ்தாபத்தை வெளிப்படை யாகவும் காண்கிறோம்.

தொண்டரடிப்பொடி ஆழ்வார் தம் பழைய நிலையில் திரு மண்டங்குடி விப்பிரநாராயணர் என்று பேரும் புகழும் பெற்றிருந் தார். அந்தப் பேரையும் புகழையும் துறந்து தம்முடைய சொத்தை

யெல்லாம் செலவு செய்து ஒரு பூங்கா அமைத்து அதில் நந்தவன கைங்கரியம் செய்து ஸ்ரீரங்க நாயகனையும் ஸ்ரீரங்கநாயகியையும் ஆராதித்து வந்தார். அப்பொழுது இவர் தேவதேவி என்ற வேசி ஒருத்தியைக் காதலித்து வீழ்ச்சிநிலையை அடைந்தார் என்ற கதை பிரசித்தமானது.

தேவதேவியின் காதலில் தேவதேவனின் நினைவும் போய் விட்டது; தாயாரின் நினைவும் மறைந்து விட்டது. மோக வலையிலிருந்து தப்பமுடியவில்லை. ஒருநாள் நள்ளிரவில் தேவதேவியின் தாய் இவரை வெளியே தள்ளிவிட்டாள். அந்த நிலையிலும் தேவதேவியை இவரால் மறக்க முடியவில்லை. 'ஸ்ரீ ரங்கநாயகியே! இதுவும் மாயன் மாயா சக்தியின் விசித்திரமா? எனக்கு ஏன் இந்தப் பேயாசை?' என்று புலம்பிக்கொண்டே அந்தத் தெருவில் ஒரு திண்ணையில் படுத்துக்கொண்டு அப்படியே உறங்கிப் போய் விட்டார்.

ஸ்ரீ ரங்கநாயகி இரங்கினள்; பக்தரிடம் கருணைகூர்ந்து பகவானை நோக்கினள். தேவியின் வேண்டுகோளுக்கிணங்கித் தேவதேவனும் கருணை புரிந்தான். இந்தக் கருணையின் விளைவாக விப்ரநாராயணர் திருந்தி அடியவர் திருக்கூட்டத்தில் கலந்துகொண்டு தொண்டரடிப்பொடி ஆழ்வார் ஆகிவிட்டார் என்பது கதை. பன்னிரண்டு ஆழ்வார்கள் என்ற பக்திப் பெருஞ்சோதிகளில் ஒருவரும் ஆகிவிட்டார். காரணம் ஸ்ரீ ரங்கநாயகியின் திருவருள் என்று இக்கதை தெரிவிக்கிறது.

## மார்பிலுள்ள தாய் ஆட்கொண்டாள்

பாட்டினல் வாழ்ந்த பாணர் என்று சொல்லப்படும் திருப்பாணழ்வாரும் ஸ்ரீ ரங்க பக்தர் என்பதை நாம் அறிவோம். இவரை 'இழிகுலத்தினர்' என்று கருதிய லோகசாரங்க முனிவர் பக்திவசமாகி நின்ற திருப்பாணர் தம்மைக் கண்டு விலகாதது கண்டு கோபம் கொண்டார். முனிவருடன் வந்திருந்த ஒருவன் பாணர்மீது ஒரு கல்லையும் வீசிவிட்டான். பாணர்மேல் கல் விழுந்ததை ஸ்ரீ ரங்கநாயகியால் பொறுக்க முடியவில்லையாம். தேவியின் மனநிலை கண்டு பெருமாளும் உளம் உருகிப் போனர். பாணர் நெற்றியில் காணப்பட்ட இரத்தம் பெருமாள் நெற்றியிலும் தோன்றியதாம். லோகசாரங்கர் நடுங்கினர். பெருமாளின் கட்டளைக்கு இணங்கப் பாணரைத் தம் தோள்மேல் தூக்கிக்கொண்டு நேரே ஸ்ரீ ரங்கநாதனது சந்நிதிக்கு வந்துவிட்டார் என்ற கதையைப் பலரும் அறிவார்கள். திருப்பாணரின் ஸ்ரீ ரங்க பக்தியில் ஸ்ரீ ரங்கநாயகி பக்திக்கும் இடம் உண்டு என்று ஊகிக்கலாம்.

ஸ்ரீ ரங்கநாதனின் மேனியழகு திருப்பாணரைப் பெரிதும் வசீகரிக்கிறது.

நீலமேனி ஐயோ! நிறை
கொண்டதுஎன் நெஞ்சினையே

என்று பரவசமாகிறார். இந்த மேனியில் ஆரம் தாழ்ந்த திருமார்பும் இவரை வசிகரிக்கிறது. 'ஆரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே' என்று இவர் பாடித் தம்மை ஆட்கொண்ட பேரழகில் ஈடுபடும்போது அந்த மார்பிலுள்ளவளும் அந்தப் பேரழகை அப்படிப் பெருக்கிக் காட்டுபவளுமான திருமாமகளை இந்த ஆழ்வார் காணவில்லை என்று சொல்ல முடியுமா?

மழலை கேட்கத் தவிக்கும் தாய்

'பெரிய கோவிலை அழகு செய்தவர்' என்று போற்றப்பெறும் திருமங்கை யாழ்வாருக்கும் ஸ்ரீ ரங்கநாத பக்திபோல் ஸ்ரீ ரங்கநாயகி பக்தியும் இருந்திருக்க வேண்டும் என்பது திண்ணம்.

கள்வனேன் ஆனேன்!

என்று பச்சாத்தாபத்துடன் இவர் அழுதுதொழுது உள்ளம் தெளிந்து திருவருள் பெற்றபோது, திருமாமகளை முன்னிட்டே அருள்பெற்றுப் புதுவாழ்வு பெற்றார் எனக் கருதலாம்.

'உன் அருள் என்னிடை வைத்தாய்' என்று பாடுகிறார். 'அதுவே பருகிக் களிக்கின்றேன்' என்கிறார். தேவியின் அருளும் இவரிடம் வைக்கப் பெற்றது என்பது குறிப்பு.

தாயாய் அளிக்கின்ற
தண்தா மரைக்கண்ணா!

என்று பகவானை அழைக்கிறவர் அவன் திருமார்பில் உள்ள தாயாரையும் ஏற்கெனவே சரணமடைந்திருப்பவர்தாமே.

'என் உள்ளம் கொண்ட கள்வனை இன்று கண்டு கொண்டேனே!' என்கிறார் இவர். ஸ்ரீ ரங்கநாயகி காட்ட ஸ்ரீ ரங்க நாதரைக் கண்டுகொண்டார் என்பது குறிப்பு. இவர் பாசுரங்களில் ஸ்ரீ ரங்கநாயகியாரின் பிரஸ்தாபம் குறிப்பாகக் காணப்படுகிறது என்றால், இவரைப்பற்றி வழங்கும் கதை ஒன்றில், இப்பிரஸ்தாபம் வெளிப்படையாக வருகிறது. இவர் குமுதவல்லி என்பவளைக் காதலித்தார் என்றும், அவள் விருப்பத்திற் கிணங்க நாள்தோறும் 1008 பாகவதர்களை அமுது செய்வித்து வந்தார் என்றும் கதை வழங்குகிறதல்லவா? பொருளெல்லாம் பாகவத கைங்கரியத்தில் செலவாகி விட்டதும் இவர் திருடவும் துணிந்தார் என்று கதை தெரிவிக்கிறது.

ஒருநாள் இரவில் காட்டுவழியிலே ஒரு பெரிய கலியாணக் கூட்டம் போய்க்கொண் டிருந்தது. திருமங்கை மன்னனின் பரிவாரம் அந்தக் கூட்டத்தின் மேல் பாய்ந்தது. கிடைத்த

பொருள்களையெல்லாம் மூட்டை மூட்டையாகக் கட்டி அனுப்பி விட்டுத் திருமங்கை மன்னன் ஓர் அரசமரத்தின் கிளையில் ஏறி, 'வேறு யாராவது வருகிறாரா?' என்று பார்த்தார். மணவாளக் கோலத்தில் பார்ப்பன இளைஞன் ஒருவன் வந்து கொண்டிருந்தான்.

'ஓஹோ! இந்த மாப்பிள்ளையின் பரிவாரந்தானா? கொழுத்த பணக்காரன்!' என்று தமக்குள் சொல்லிக்கொண்டே திருமங்கை மன்னன் மரக்கிளையிலிருந்து இறங்கி வந்தார். தம்பதிகள் முன் திடீரென்று தோன்றினார். 'மாப்பிள்ளையே! மரியாதையாக உன்னுடைய ஆபரணங்களையெல்லாம் கொடுத்து விடு' என்று பயமுறுத்தினார். நகைகளைக் கழற்றிக் கழற்றிப் போட்டாள் மணவாட்டி. ஒரு வேலாயுதத்தைக் காட்டியதும் மாப்பிள்ளையும் தன் பொருள்களைக் கொடுத்து விட்டான்.

'திருமங்கலியத்தைக் கழற்ற வேண்டாம்' என்று மணப் பெண்ணுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு மாப்பிள்ளையிடம், 'நீ அந்த மோதிரத்தையும் கழற்றிக் கொடுத்துவிட வேண்டியதுதான்' என்று நெருங்கினார். 'அஞ்ச வேண்டாம்' என்று மாப்பிள்ளைக்கு அபயதானமும் அளித்தார். 'எனக்கும் உன்னைப்போல் ஒரு மனைவி உண்டு' என்றார். 'என் உயிரான குமுதவல்லிக்கு இதோ மகா லட்சுமிபோல இருக்கிறாளே உன்னுடைய தேவி, இவளும் ஒப்பாக மாட்டாள்!' என்று பெருமை பேசினார். ஆனால் அந்த மணவாட்டி மகாலட்சுமியேதான் என்பதைத் திருமங்கை மன்னன் அந்தக் கணத்தில் அறிந்து கொள்ளவில்லை.

'மோதிரம் இறுகி இருக்கிறதே, எப்படிக் கழற்றுவேன்?' என்று மாப்பிள்ளை முணுமுணுத்ததும், 'இப்படிக் கழற்றுவேன்' என்று திருமங்கை மன்னன் மாப்பிள்ளையின் கையைப் பிடித்துக்கொண்டு பல்லால் கடித்து இழுத்தார். அந்தக் கணத்திலேயே 'அவள் மகாலட்சுமிதான்!' என்ற நினைவு பிறந்தது.

நகைச்சுமையைத் தூக்க முடியவில்லை. அசைக்கவும் முடியவில்லை. மாப்பிள்ளை ஏதோ மந்திரவாதம் பண்ணிவிட்டான் என்று கருதி வாளை உருவினார். 'அந்த மந்திரத்தைச் சொல்லு, அதற்கு மாற்று என்ன?' என்று மாப்பிள்ளையை அதட்டிக் கேட்டார். உடனே, பயந்திருந்ததுபோல் விலகி நின்ற மாப்பிள்ளை பயம் தெளிந்துவிட்டதுபோல் நெருங்கி வந்து, 'அந்த மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறேம். இப்படி வாரும்' என்று அவர் கழுத்தைக் கட்டிக்கொண்டான். செவியில் அஷ்டாட்சர மகாமந்திரத்தை உபதேசித்தான்.

திடீரென்று தம்பதிகள் காணுமல் போய்விட்டார்கள். 'நிதி போச்சே, ஐயோ!' என்று வானத்தைப் பார்த்தார் திருமங்கை மன்னன். பணம் போச்சே என்ற கவலை இல்லை இப்போது. வந்தவர்கள் தெய்வ தம்பதிகள் என்று தெரிந்துவிட்டது. அந்தத் தம்பதிகளை மண்ணில் காணுமல் இப்போது விண்ணிலே கண்டார்.

ஒரு பொன்மலை மீது நீலமேகம் மின்னலோடு உலாவுவதுபோல் ஒரு காட்சி தென்பட்டது. கருடன் மீது மகாலட்சுமியோடு காட்சியளிக்கும் மாப்பிள்ளையை வானவர்களும் பிறரும் திரள் திரளாக வணங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். அழகிய மணவாளனுன இறைவனை நோக்கி, 'அந்தோ! உன் தேவியையும் வழிப்பறி செய்தேனே!' என்று பாறையில் தலையை முட்டிக் கொள்ளப் போனுர். உடனே தாயின் குரல் 'அப்படிச் செய்ய வேண்டாம்' என்று தடுத்துவிட்டது.

'ஆழ்வாரே! உம்மை நாங்கள் திருவிளையாடல் புரிந்து சோதிக்க வந்தோம். குழந்தை சொல்லும் மழலைச் சொல்லுக்குத் தவித்து நிற்கும் தாய்போல் இருக்கிருள் இந்தப் பெண்!' என்றுர் பெருமாள். 'பாமாலை மணக்கும் அந்த வாயால் பகவானைப் பாடுவீர்' என்றுள் தாயாகிய லட்சுமி. பகவான் பரிவாரத்துடன் மறைந்து விட்டான். 'வாடினேன் வாடி' என்று தொடங்கிப் பாடத் தொடங்கினுர் திருமங்கை மன்னன்.

பகவானுடைய அருளால் திருமங்கை மன்னன் ஞானபக்தி பெற்றுர் என்கிருர்கள். மகாலட்சுமியின் அருளே இவருக்கு வழி காட்டியது என்று ஊகிக்கலாம். ஸ்ரீ ரங்கநாயகியின் அருளால் குமுதவல்லியின் காதல் இவரைக் கைங்கரியத்தில் ஒருமுகப்படுத்திப் பக்திக் காதலர் ஆக்கிவிட்டது என்ற கருத்துடன் ஸ்ரீ வைஷ்ணவர்கள்,

> வலம்திகழும் குமுதவல்லி
> மணவாளன் வாழியே

என்று இந்த ஆழ்வாரை வாழ்த்தி யிருக்கிருர்கள்.

### தாயை நினைத்தே அழுத குழந்தை

குலசேகராழ்வாரும் ஸ்ரீ ரங்க பக்தி உள்ளவர். ஸ்ரீ ரங்கநாதனுடைய தரிசனமும் அங்கே உள்ள அடியார்களுடைய பழக்கமும் தமக்கு இன்றியமையாதன என்று இவர் கருதியதாகக் கதை வழங்குகிறது. மந்திரிகள் ஸ்ரீ ரங்க யாத்திரையைத் தடுக்க முயன்றுர்கள். இவரோ நந்தனுரைப் போல் 'நாளைப் போவேன், நாளைப் போவேன்!' என்ற நம்பிக்கையுடன் ஸ்ரீ ரங்கத்தை மறந்துவிடாமலே இருந்தார். கடைசியாக ஸ்ரீ ரங்கநாயகியின் திருவருளை முன்னிட்டு இவர் ஸ்ரீரங்கநாதனைத் தரிசித்துப் பேறு பெற்றுர் எனக் கருதலாம்.

திருவரங்கத்திலிருந்து வந்து சேர்ந்த அடியவர்கள் இவருக்கு ஸ்ரீ ரங்க பக்தியை அதிகரிக்கச் செய்தனர். அவர்கள் தமக்குத் 'தீதில் நன்னெறி' காட்டியதாக இவர் பாடியிருக்கிருர். இந்தத் 'தீதில் நன்னெறி'தான் ஸ்ரீ வைஷ்ணவம் என்ற பக்தி மதம். எனவே இதன் முக்கிய அம்சமாகிய திருமகளைப் பற்றிய கொள்கையையும் இவர் நன்கு உணர்ந்திருந்தார் எனக் கருதுவது பொருத்தமே.

ஈன்ற தாய் அகற்றிவிட்டாலும் குழந்தை தாயை நினைத்தே அழுதுகொண்டிருக்கிறதல்லவா? அதே நிலையில் தாமும் இருப்பதாக இவர் பாடியிருக்கிறார்.

*அரிசினத்தால் ஈன்றதாய்*
*அகற்றிடினும், மற்றவள்தன்*
*அருள்நினைந்தே அழும்குழவி*
*அதுவேபோன் றிருந்தேனே!*

என்று உருகிக் கதறி ஸ்ரீரங்கத்தை நோக்கிப் புறப்பட்டவர் தாயாகிய ஸ்ரீ ரங்கநாயகியை முன்னிலைப் படுத்தியே பகவானைச் சரணமாக அ டைந்தார் என்று கருதுவது பொருத்தம்தானே.

### லட்சுமியுடன் கருணைப் போட்டி

'பல்லாண்டு பாடிய பட்டர்பிரான்' என்று போற்றப்பெறும் பெரியாழ்வாரும் பிராட்டி-பக்தி உள்ளவரே. இவர் பாடிய பல்லாண்டிலேயே மகாலட்சுமியின் பிரஸ்தாபம் வருகிறது. 'வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு!' என்று இவர் பாடியிருப்பதைப் பலரும் அறிவர்.

வேறு பாடல்களிலும் பெரியாழ்வார் திருமகளைக் குறித்துப் பிரஸ்தாபிக்கிறார். கண்ணனைக் குழந்தைப் பருவத்தில் பாடியிருக்கும் பாடல்களிலும் திருமாலின் மார்பில் திருமாமகள் வீற்றிருக்கிறாள் என்பதை இவர் மறப்பதில்லை. அனுமன் சீதைக்கு அடையாளம் கூறுவதாக இவர் பாடியிருக்கும் பாடல்களில் பெரிய பிராட்டியாகிய மகாலட்சுமியே சீதாபிராட்டி என்ற கருத்தை வெளிப்படையாகவும் குறிப்பாகவும் புலப்படுத்துகிறார். ருக்மிணியைக் கண்ணன் தேவியாகக் குறிப்பிடும்போது இவள் பெரிய பிராட்டி என்பதையும் உய்த்துணர வைக்கிறார்.

கருணையில் மகாலட்சுமிக்கும் பகவானுக்குமிடையே போட்டி நடப்பது போலவும் இந்த ஆழ்வார் பாடி யிருக்கிறார். பெரிய பிராட்டியே தன் இயல்பை மறைத்துக்கொண்டு அடியவர்கள் மீது குற்றம் சுமத்த முயன்றாலும், பகவான் 'என் அடியவர்கள் அப்படிச் செய்ய மாட்டார்கள், அவர்கள் செய்வதே நன்று' என்று உறுதி கூறுகிறான். என்ன அழகான கருணைப் போட்டி பாருங்கள்!

### திருமகள்போல வளர்ந்தாள்!

ஆண்டாளும் திருமகளை முன்னிலைப் படுத்திக் கடவுளை அடைந்தாள் எனக் கருதுவதே முறையாகும். நப்பின்னைப் பிராட்டியை வழிகாட்டியாகக் கொண்டு கோபியர்கள் கண்ணனை அடைவதாகத்தானே ஆண்டாள் திருப்பாவையில் கூறுகின்றாள். இவளைக் குறித்துப் பெரியாழ்வார்,

திருமகள்போல வளர்த்தேன்;
செங்கண்மால் தான்கொண்டுபோனான்

என்று கூறியுள்ளார். பெரிய பிராட்டிபோல் கோதையும் இறைவனின் காதலுக்கு உரியவள் என்பது குறிப்பு.

## திருமகள் நாதன்

ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வாரின் பாசுரங்களிலேதான் ஸ்ரீ வைஷ்ணவத்தின் முழு அழகையும் ஆற்றலையும் காண்கிறோம். இவர் திருமாலைச் சரணமடைவதற்குத் திருவின் தயவு வேண்டும் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியுமா? நம்மாழ்வார் காட்டும் தத்துவ சிகரத்தில் திருமாமகளுக்கு இன்றியமையாத ஸ்தானம் உண்டு என்பது வெளிப்படை. இவர் திருமால் என்று கூறும்போதே திருவுடன் சேர்ந்த மாலைத்தான் குறிப்பிடுகிறார் என்பது உறுதி. 'கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே!' என்று இவர் கூறும்போது லட்சுமி நாராயண மூர்த்தியை இவர் கண்டுகொண்டார் என்பதே பொருளாகும். இவர் காட்டும் கரியமுகில் வண்ணன் மின்னலொடு கூடிய முகில் வண்ணன்தான் என்பதைச் சொல்லவா வேண்டும்? ஸ்ரீ ராமாநுஜர் வளர்த்த ஸ்ரீ வைஷ்ணவத்திற்கு முதல் தாய் நம்மாழ்வார் அல்லவா? இதத் தாய் என்ற வளர்ப்புத் தாய்தானே ராமாநுஜர்.

கமலை என்ற மகாலட்சுமியுடன் விளங்கும்போதுதான் பகவான் கருணைமுகில் ஆகிறான் என்பதுதான் ஆழ்வார் - ஆசாரியர்களின் அரும்பெருங் கொள்கை. ஆழ்வார்களின் தமிழ் மாலைகளைத் தெளிய ஓதி, தெளியாத வேத வேதாந்தப் பகுதிகளையும் தெளிவாக்கிக் கொண்ட வேதாந்த தேசிகன்,

தேனார் கமலத்
திருமகள் நாதன்

என்று பெருமானைக் குறிப்பிடும்போது ஆழ்வார்களின் கருத்தொருமித்த கொள்கையையே குறிப்பிடுகிறார் எனலாம்.

ஒண்தொடியாள் திருமகளும்
தானும் ஆகி
ஒருநினைவால் ஈன்றஉயிர்
எல்லாம் உய்ய

என்று இப்பெரியார் கூறியிருப்பதும் ஆழ்வார் - ஆசாரியர்களின் கொள்கைதான்.

'அம்புயத்தாள் கணவனை நாம் அணுகப் பெற்றோம்' என்று இவர் கூறுவதும்,

திருமகளோ(டு) ஒருகாலும்
பிரியா நாதன்

என்று கூறுவதும் ஸ்ரீ வைஷ்ணவத்தின் அடிப்படைக் கொள்கையைச் சுட்டிக் காட்டுவதுதான்.

# 6. மகாலட்சுமியும் அலர்மேல் மங்கையும்

திருவரங்கத்துக்கு அடுத்தபடியாகப் பேரும் புகழும் பெற்றிருக்கும் விஷ்ணுஸ்தலம் திருப்பதிதான். திருவரங்கத்துக்கு அடுத்தபடியாக ஆழ்வார்களால் பாடப் பெற்றிருப்பதும் இந்தத் தலம்தான். திருப்பதியும் வடநாடும் தென்னாடும் ஒருங்கே தொழநின்ற திவ்ய ஸ்தலம் என்று நீண்டகாலமாகப் பிரசித்தி பெற்று வந்திருக்கிறது.

திருமாலின் திருவடிகளை நமக்குக் காட்டும் பெரிய கோவில் திருவரங்கம் என்றால், அத்திருவடிகளை நமக்குக் காட்டும் மலை திருவேங்கட மலை என்பர்.

ஆராத அருளமுதம்
பொதிந்த கோயில்

என்று திருவரங்கத்தைப் பாடும் வேதாந்த தேசிகன்,

கண்ணன்அடி யிணைஎமக்குக்
காட்டும் வெற்பு

என்று திருவேங்கட மலையைப் பாடுகிறார்.

திருவேங்கட மலையின் அருமை பெருமைகளை வருணிக்கும் தல புராணம் ஒன்று உண்டு. இதைத் திருவேங்கடத் தல புராணம் என்றும், திருப்பதி மான்மியம் என்றும் கூறுவதுண்டு. இப்புராணம் வடமொழி வரலாறுகளிலிருந்து சுமார் 110 ஆண்டுகளுக்கு முன்பு மதுரகவி ஸ்ரீ வீரராகவஸ்வாமி ஐயங்கார் என்பவரால் தொகுத்து 1500 தமிழ்ப் பாடல்களால் இயற்றப்பட்டதாகும். இவர் தம் தமிழ் நூலுக்குக் கொடுத்த பெயர்தான் திருவேங்கடத் தலபுராணம் என்பது. இது வசன நடையிலும் வெளியிடப் பெற்றிருக்கிறது.

### திருமகளும் ஸ்ரீநிவாசனும்

நாரத மாமுனிவர் திருப்பாற்கடலை அடைந்த அத்தியாயத்துடன் தொடங்குகிறது இப்புராணம். மற்றப் புராணங்களைப்போல் இதுவும் நைமிசாரணிய வாசிகளான முனிவர்களுக்குச் சூத முனிவரால் சொல்லப்பட்டது தானும். திருமால் கோயில் கொண்டிருக்கும் திருப்பதிகளில் சிறந்தது எது என்பது கேள்வி. அது திருவேங்கட

மலை என்பது விடை. இந்த விடை கூறும்போது 'உலகில் உள்ள புண்ணிய நதிகள் எல்லாம் ஏத்துமாறு உயர்வு பெற்றிருக்கும் கோனேரி தீர்த்தக் கரையில் திருமால் திருமகளுடன் தங்கியுள்ளான்' என்று நாரதர் பிருகு முனிவருக்குத் தெரிவித்தாராம்.

அடுத்த அத்தியாயத்தில் திருமலையின் தோற்றம் உரைக்கப்படுகிறது. திருமகளுடன் கூடிய நாராயணன் ஸ்ரீநிவாசனாகத் திருமலை என்ற திருப்பதியில் புரிந்த திருவிளையாடல்களை யெல்லாம் தாம் அறியுமாறு சொல்லவேண்டுமென்று பிருகு முனிவர் கேட்பதாகத் தொடங்குகிறது மூன்றும் அத்தியாயம். திருமலைக்குச் சேஷாசலம் என்ற ஒரு பெயரும் உண்டு. இம்மலை மேல் நாராயணர் என்ற முனிவர் திருமகள் கேள்வனை உள்ளத்தில் இருத்தி யோகத்தில் அமர்ந்தாராம். அனந்த கலியாணகுண மூர்த்தியான பெருமான் திருமகளுடன் கருட வாகனத்தின்மீது முனிவருக்குக் காட்சியளித்தான். இது இத்தல புராணத்தின் மூன்றும் அத்தியாயத்தில் காணப்படும் செய்தி. அடுத்த அத்தியாயத்தில் இடபாசுரன் வதம் செய்யப்பட்ட செய்தி வருகிறது.

தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் வேங்கடாசலம் என்று இம்மலைக்குப் பெயர் வந்த காரணம் முதலியன கூறப்படுகின்றன. தொண்டைமான் சக்கரவர்த்தியைப் பற்றிய கதையும் காணப்படுகிறது. வேறு செய்திகளும் காணப்படுகின்றன; தீர்த்த மகிமை முதலான விவரங்களும் உரைக்கப்படுகின்றன.

இப்புராணத்தின் அத்தியாயம் ஒன்றில் ராமாநுஜரின் பிரார்த்தனைக்கு இணங்க ஸ்ரீநிவாசக் கடவுள் சங்கு சக்கரம் தரித்த வரலாறும் காணப்படுகிறது. அடுத்த அத்தியாயம் வைணவச் சிறப்பை எடுத்துரைக்கிறது. அதற்கு அடுத்த அத்தியாயத்தில் பிரவர்த்தி மார்க்கம் பேசப்படுகிறது. எனவே இத் தலபுராண வரலாறுகள் சில ராமாநுஜர் காலத்திற்குப் பின்பே தோன்றியிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். எனினும் வேறு சில செய்திகள் பழைய புராணச் செய்திகளாகவும் இருக்கக் கூடும்.

### அலர்மேல் மங்கை அவதரிக்கிறாள்

திருச்சானூர் அலர்மேல் மங்கைத் தாயாரை அறியாதார் இல்லை. இத்தாயாரின் அவதாரக் கதை திருவேங்கடத் தல புராணத்தின் 35வது அத்தியாயத்தில் வருகிறது. பழைய காலத்தில் சந்திர வம்சத்தில் தோன்றிய ஓர் அரசன் தொண்டை மண்டலத்தில் நாராயணபுரத்திலிருந்து அரசு புரிந்தபோது பாண்டியன் புதல்வியை மணந்து வியன் என்ற புதல்வனைப் பெற்றான் என்று இக்கதை தொடங்குகிறது.

தம் புதல்வனுக்கு இந்த அரசன் தரணி என்னும் நங்கையை மணம் செய்வித்துத் தன் அரசையும் கொடுத்துவிட்டுத் தவஞ்

செய்யப் போய்விட்டான். பின்னர் வியன் என்ற அரசன் அறநெறி வழுவாது அரசு புரிந்தான். அப்போது ஒரு வேள்வி செய்வதற்காக முனிவருடனும் சிற்றரசர்களுடனும் ஆலோசனை செய்தான். அவர்கள் சூழச் சென்று, ஆரணி நதிக்கரையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் பொன் கலப்பையினால் உழுதான். அப்படி உழும்போது அந்த நிலத்தில், தாமரைப் பூவின் மீது ஒரு மின்னற்கொடி தோன்றினாற் போல், ஒரு நங்கை தோன்றினாள். அரசன் வியப்பிலும் மகிழ்ச்சியிலும் ஆழ்ந்தான்.

அப்போது ஆகாயவாணி 'இக்கன்னியை நீ உன் மகளாகப் பாவித்து வளர்க்க வேணும்' என்று கட்டளையிட்டாள். அதைச் சிரமேல் தாங்கி வியன் என்ற மன்னன் அக்குழந்தையை ஏற்றுத் தன் கையால் எடுத்துக்கொண்டு போய்த் தன் மனைவி கையில் கொடுத்தான். ஜனகன் சீதையைக் கண்டெடுத்த இராமாயணக் கதைப்பகுதி இப்போது நினைவிற்கு வருகிறதல்லவா?

ஆம்; ஜனகன் சீதையை வளர்த்தவாறே வியன் என்ற அரசனும் இப்பெண்ணை வளர்த்து வந்தான் என்கிறது தலபுராணம். அப்பால் ராணியான தரணியும் கருக்கொண்டு ஒரு புதல்வனைப் பெற்றாள். மன்மதனும் நாணும்படியான அழகுடன் காணப்பட்டான் அப்புதல்வன். வசுதாசன் என்று இவனுக்குப் பெயரிட்டார்கள். புதல்வன் தந்தையினும் மிக்க திறமை வாய்ந்தவனாக வளர்ந்து வந்தான்.

உழுத நிலத்திலே தாமரை மலரில் தோன்றியதுபோல் வெளிப்பட்டு வந்த பெண்ணுக்குப் பத்மினி (பத்மம் அல்லது தாமரையில் வாழ்பவள்) என்று பெயரிட்டார்கள். 'பத்மினி'—தமிழில் அலர்மேல் மங்கை. இவள் அழகிலும் ஆனந்தத்திலும் அறிவிலும் வளர்ந்து வந்தாள். தனக்கு நிகரான பெண் வேறொருத்தியும் இல்லையென்று சொல்லும்படி வளர்ந்து வந்தாள். இப்பெண்ணுக்கு ஒப்பானவர்கள் எவ்வுலகத்திலும் இருக்க முடியாது என்றுகூட முனிவர்கள் கருதினார்கள்.

### ஸ்ரீநிவாசன் வேட்டை

பத்மினி ஒருநாள் தன் தோழிமார்களோடு ஒரு சோலையை நோக்கிச் சென்றாள். தென்னை மந்தாரை முதலிய மரங்கள் நெருங்கியிருந்த ஒரு காட்டுப் பாதை வழியாகச் சென்றாள். குயில்கள் கூவுவதைக் கேட்டுக்கொண்டே போனாள். கிளிகள் கொஞ்சுவதையும் மயில்கள் கூத்தாடுவதையும் பார்த்துக்கொண்டே போனாள். பூக்களைச் சுற்றி வண்டுகள் ரீங்காரம் இடுவதும் இவள் காதில் விழுந்தது. இப்பெண் விண்ணளாவிய சோலைக்குள் சென்றாள்; அங்கே மலர் கொய்து உலாவிக் கொண்டிருந்தாள் தோழிமாரும் தானுமாக.

அப்போது நாரதமுனிவர் அங்கே வந்தார். 'நீ கடலில் பிறந்த திருமகள் என்பதை அறிவேன்' என்று சொல்லிப் போய்விட்டார்.

பத்மினிக்கு ஒரே மகிழ்ச்சிதான். அது ஒரு பாராட்டுரை என்றே எண்ணினாள். பின்னர் அந்த நங்கை தோழிமாரோடு மலர் கொய்து கொண்டிருக்கும்போது, ஒரு பெரிய யானை ஆரவாரம் செய்து கொண்டு வருவது கண்டு இவள் அச்சமடைந்தாள். பத்மினியின் தோழிமாரும் காட்டின் ஒரு புறத்துக்கு ஓடிப்போய் அங்கே மறைந்து நின்றார்கள்.

அந்த வழியாக வெண்ணிறக் குதிரைமீது பேரழகு வாய்ந்த மேனியன் ஒருவன் பொன்னுடை துலங்க வில் அம்புகளுடன் வந்து கொண்டிருந்தான். இவர்களைத் துரத்திக்கொண்டு வந்த யானை குதிரைமேல் வந்தவனைக் கண்டு துதிக்கையைத் தூக்கி நீட்டித் தொழுதது. பிறகு ஒரு முழக்கம் செய்துவிட்டு அந்த இடத்தை விட்டுப் போய்விட்டது.

பின்னர் குதிரைமேல் வந்தவன் இம் மங்கையர்களை அணுகி, 'நீங்கள் யார்?' என்று விசாரித்தான். அவன் இப்படிக் கேட்டதும் இப்பெண்கள், 'வில்லுடன் வேட்டையாட வந்த நீர் யார்?' என்று எதிர்க் கேள்வி ஒன்று அவனை நோக்கிக் கேட்டார்கள். இந்தக் காட்டில் விலங்கு வேட்டை அனுமதிக்கப் படவில்லையே என்று ஒருத்தி சொன்னாள். 'விரைவாக வெளியே போய்விடும்' என்றும் அவனை இவர்கள் அவசரப்படுத்தினார்கள்.

அந்த அண்ணலோ அமைதியாகக் குதிரையினின்றும் இறங்கினான். 'பெண்களே! உங்கள் பெயரும் ஊரும் தெரிந்துகொண்டு நான் என் இருப்பிடமாகிய திருமலைக்குத் திரும்புவேன்' என்று சொன்னான். அதற்கு மங்கையரில் ஒருத்தி பத்மினியைச் சுட்டிக் காட்டி அவள் பெயரைத் தெரிவித்து, 'நாங்கள் தோழிமார்' என்று பதில் சொன்னார்கள். 'நீர் யார்? இங்கு ஏன் வேட்டையாட வந்தீர்?' என்று மறுபடியும் அவனை அவர்கள் கேட்டார்கள்.

'என் பெயர் கண்ணன்; இருப்பு வேங்கடமலை' என்றான் அந்த இளைஞன். வேட்டை நாடி வந்ததாகவும், பத்மினியைக் கண்டதும் காதலில் ஆழ்ந்துவிட்டதாகவும் அவன் கூசாது பதில் சொன்னான். பத்மினியின் தோழியர் அனல்போலச் சினந்து சீறினார்கள். 'எங்கள் அரசன் உம்மைக் கண்டால் சிறைப்படுத்துவான்' என்று பயமுறுத்தினார்கள். விரைந்து ஓடி இருப்பிடம் அடைந்து பிழைத்துப் போகலாம் என்று புத்திமதியும் சொன்னார்கள். அந்தக் கண்ணனும் அப்படியே ஓடிப்போய் வேங்கட மலையை அடைந்தான்.

இப்படிச் சூதமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்கு உரைத்தார் என்று தலபுராணத்தின் 36-வது அத்தியாயம் கூறுகிறது.

### வகுள மாலிகையின் தூது

நைமிசாரணிய வாசிகளான முனிவர்களுக்கு இந்தக் காதற் கதையைத் தொடர்ந்து கேட்க வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது.

கண்ணன் வேங்கடமலையை அடைந்து பத்மினி என்ற பெண்ணையே கருத்தில் கொண்டு மேனி வெதும்பப் பள்ளிகொண்டிருந்தான் என்று கதையை நிறுத்திய இடத்திலிருந்து தொடர்ந்தார் சூதமுனிவர்.

அப்போது தோழியாகிய வகுள மாலிகை வந்து தேவரும் அறியாத திருவடிகளைத் தன் இரு கைகளாலும் வருடினாள். 'இறைவா, அமுது செய்யாது சயனித்திருப்பதற்குக் காரணம் யாதோ?' என்று மெல்லக் கேட்டாள். அதற்குக் கண்ணன் ராவணனைப் பற்றிய ஒரு கதைத் துணுக்கை எடுத்துரைத்தான். ராவணன் தவவலிமையால் செருக்குக்கொண்டு இலங்கையிலிருந்து புஷ்பக விமானத்தில் விரைந்து செல்லும்போது வேதவதியாகத் தோன்றி ஒரு ரிஷி ஆச்சிரமத்தில் வளர்ந்துகொண்டிருந்த மகாலட்சுமியைக் கண்டு மையல் கொண்ட அந்தக் கதையைக் கண்ணன் தோழி வகுள மாலிகைக்கு நினைவூட்டினான்.

வேதவதி வெகுண்டு 'அழகில் என்னை ஒத்த பெண் ஒருத்தியால் நீ அழிந்து போவாய்' என்று சாபம் கொடுத்து நெருப்பில் விழுந்துவிட்டாள். அந்தச் சாபத்தை ஏற்ற ராவணன் இலங்கைக்குத் திரும்பிய பின் வேதவதி இலங்கையில் ஒரு பொய்கையில் தாமரை மலரில் ஒரு பெண் மகவாய்த் தோன்றினாள். ராவணன் இதை அறிந்ததும் வேதவதியின் சாபத்தை நினைத்து அச்சமுற்று அந்த மகவை அந்த மலரோடு ஒரு பெட்டியில் இட்டு மூடிக் கடலில் விட்டுவிடுமாறு கட்டளையிட்டான். அந்தப் பெட்டியை வருணன் மிதிலை நகருக்கு அருகில் கொணர்ந்து சேர்த்துவிட்டான். அந்தப் பெண்ணே ஜனகனுக்குக் கிடைத்த சீதா பிராட்டி. இப்படிக் கூறிய கண்ணன் 'நான் ராமனாக அவதரித்துப் போய் அவளை மணந்தேன்' என்று சொன்னான்.

சீதை கடைசியாகப் பூமிக்குள்ளே புகுந்து மறைந்த அந்தப் பழைய வரலாற்றைக் கூறிவிட்டு, கண்ணன் வகுள மாலிகையை நோக்கி, 'அந்தச் சீதை நாராயணபுரத்தில் நிலத்திலே தோன்றிப் பத்மினியாக வளர்கின்றாள்' என்றான். அவள் சோலையில் மலர் கொய்யத் தோழியருடன் வந்திருந்தபோது, தான் குதிரைமீது வேட்டையை வியாஜமாக வைத்துக்கொண்டு போய்ப் பார்த்து வந்ததாகவும் சொன்னான்.

கடைசியாகக் கண்ணன், 'வகுள மாலிகையே! அந்த அணங்கை நீ அழைத்து வந்தால் என் துயர் நீங்கும்' என்றான். வகுளமாலிகையும் ஒரு குதிரைமீது ஏறி உடனே புறப்பட்டுச் சென்றாள். பத்மினியின் தோழியரைக் கண்டு உரையாடினாள். பத்மினி வேட்டை நாடி வந்திருந்த ஓர் அண்ணலைச் சந்தித்த பின் அவனையே நினைத்துக் கொண்டிருப்பதாகவும் தெரிவித்தார்கள். வகுளமாலிகையை அத் தோழியர் 'நீ யார்?' என்று விசாரித்தார்கள்.

வகுள மாலிகை அவர்களை நோக்கி 'உங்கள் தலைவியின் விருப்பம் இனிது நிறைவேறுமாறு நான் திருமலையிலிருந்து வந்திருக்கி

றேன். உங்கள் தலைவியை இப்போதே பார்க்க விரும்புகிறேன்' என்றாள். தோழிமார் உடனே வகுளமாலிகையை அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். அப்போது ஒரு குறப்பெண், 'நான் முக் காலப் பலன்களும் சொல்ல வல்லேன்' என்று சொல்லிக்கொண்டு வந்ததை இவர்கள் கண்டார்கள்.

உடனே தோழிமார் அவளை அழைத்து முறத்தில் முந்நாழி முத்தைக் கொட்டிப் பலன் சொல்லுமாறு கேட்டார்கள். அந்தக் குறத்தியும் இவர்கள் தலைவியின் காதலைக் குறித்துச் சொல்லிவிட்டு, இவள் காதலிக்கிற அண்ணலைக் குறித்தும் சிறிது உரைக்கத் தொடங்கினாள். திருமலை இறைவன் அரசிளங் குமரனாக உருக் கொண்டு வந்து தலைவியை நாடிக் கண்டு மீண்டதும் அன்றி ஒரு பெண்ணைத் தூது விடுத்துள்ளான் என்றும் தெரிவித்தாள். தலைவி யின் நோக்கம் இனிது நிறைவேறும் என்று குறத்தி சொல்லிவிட்டுத் தன் பிள்ளையின் தலைக்கு எண்ணெயும் தனக்குப் பழந்துணியும் அன்னமும் பெற்றுக்கொண்டு போய்விட்டாள். பூமி தேவியே இப் படி ஒரு குறப்பெண் வடிவில் வந்ததாக வகுளமாலிகை ஊகித்துக் கொண்டாள்.

தோழியர்கள் நடந்ததையெல்லாம் தலைவியின் தாயான அரசி யிடம் விரித்துரைத்தார்கள். அரசியும் புதல்வியைக் கலந்து கொண்டு, வகுளமாலிகையின் வருகை குறித்து மகிழ்ச்சி தெரிவித் தாள். வகுள மாலிகையும் வந்த காரியம் பலித்துவிட்டது என்று தெரிந்துகொண்டாள் பிறகு அரசியைச் சந்தித்தாள் வகுள மாலிகை. இருவரும் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தனர். தான் தூது வந்த செய்தியை வகுளமாலிகை தெரிவித்ததும், அரசி மகிழ்ந்து அரசனுக்குச் செய்தி சொன்னாள்.

அரசன் தன் புரோகிதரை அழைத்து, 'பத்மினியின் திருமணத் திற்கு நல்ல முகூர்த்தத்தை ஆராய்ந்து சொல்லுங்கள்' என்றான். கன்னிகையின் நட்சத்திரமாகிய மிருகசீர்ஷத்திற்கும் திருமலை இறைவனின் திரு நட்சத்திரமாகிய திருவோணத்திற்கும் பொருத்தம் இனிது என்று புரோகிதர் கூறி, வைகாசி மாசத்தில் உத்தர பல்குன நட்சத்திரத்தில் திருமணம் நடப்பது நலம் என்றார்.

## நகரின் அலங்காரம்

பத்மினிக்கும் திருமலை நாதனுக்கும் திருமணம் என்ற நற்செய்தி மண்ணிலும் விண்ணிலும் அறிவிக்கப்பட்டது. நாராயணபுரம் நன் றாக அலங்கரிக்கப்பட்டது. மணிகளாலும் பொன்னாலும் மண்டபம் பந்தல் மேடை முதலியவை அமைக்கப்பட்டன. மாளிகைகள் எல்லாம் புதுப்பிக்கப்பட்டன. கொடிகள் வரிசையாகப் பறந்தன. தெருக்களில் நீர் தெளித்து மக்கள் மணிக்கோலங்களால் வாசல்களை அழகு செய்தனர். எங்கே பார்த்தாலும் மலர் மாலைகள் பழக்குலை

கள் கரும்பு கமுகு வாழை முதலியவற்றை நாட்டினார்கள். திண்ணை கள்தோறும் பூர்ண கும்பங்கள் வைத்தார்கள்.

இந்திரன் அரம்பையர் சூழ வந்து ஆகாய வீதியிலிருந்து அணி நகர் கண்டு கற்பக மலர்களைப் பொழிந்தான். குபேரன் தன தானியங்களைக் குவியல் குவியலாகக் கொண்டுவந்து கொட்டி வீடுகள் தோறும் நிரப்பி வைத்தான். நோயோ மரணமோ எவரையும் அணுக விடாத பொறுப்பை எமனே மேற்கொண்டான்! இப்படியெல்லாம் அழகு பெற்ற நகரத்திற்குக் குபேரபுரமும் நிகரல்ல, இந்திரபுரியும் நிகரல்ல என்று பலரும் பேசிக்கொண்டார்கள்.

வகுளமாலிகை தூது பலித்ததென்று திருமலை இறைவனிடம் விண்ணப்பித்துக்கொண்டாள். இறைவன் தன்னைப் பத்மினி அல்லும் பகலும் தியானித்து மெலிந்திருக்கிறாள் என்பதை அறிந்துகொண்டதும் உளம் குழைந்து, 'விரைவில் நான் வந்து திருமணம் செய்து கொள்கிறேன் என்று பத்மினிக்குச் சொல்லுக' என்று செய்தி அனுப்பினான். அந்தச் செய்தியுடன் தன் துளசிமாலையையும் அறிகுறியாக அனுப்பிவைத்தான்.

பத்மினி பணிந்து துளசிமாலையை ஏற்றுக்கொண்டு தன் தலையில் சூடி மகிழ்ச்சியடைந்தாள். மெலிந்த உடல் பூரிக்கவும் பெற்றாள். அரசன் இறைவன் வருகையை அமைச்சர்களோடு எதிர்நோக்கியிருந்தான். இப்படிச் சூதர் கூறி நிறுத்தியதும், 'ஸ்ரீநிவாச கல்யாணத்தைத் தொடர்ந்து கூறி முடிக்க வேண்டும்' என்று நைமிசாரணியத்து முனிவர்கள் வேண்டிக் கொண்டார்கள்.

## ஸ்ரீநிவாச கல்யாணம்

பத்மினியின் நகரத்திலிருந்து அந்த அரசனின் பிரதிநிதியாக இந்திரன் முதலான தேவர்களே திருவேங்கடமலையை அடைந்து கண்ணனை அடிவணங்கி, 'ஸ்ரீநிவாசப் பெருமானே! திருமணத்திற்கு எழுந்தருள வேணும்' என்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். தேவ மங்கையர் சோபனம் பாடச் சிலர் விருது கூறினர். இசைக்கருவிகள் முழங்கின. நடன மாதர் நாட்டியம் ஆடினர். முனிவர்கள் துதி செய்தனர். இறைவன் நறுமணத் தைலம் பூசி நீராடித் தூப மூட்டிக் கொண்டபின் பீதாம்பரம் தரித்துக்கொண்டு செம்பொன் ஆசனத்தில் எழுந்தருளினான். மேனியில் களபக் கலவை பூசிக்கொண்டான். மணிக்குண்டலம், மகுடம், கௌஸ்துப ஆரம், மணிக்கண்டிகை முதலிய அணிகளை அணிந்துகொண்டு இந்த அணிகளுக்கு மேலாகத் துளசி மாலையையும் அணிந்து கொண்டான். பிறகு அவரவர்க்குத் தக்க ஊர்திகளில் எல்லாரும் ஏறிக்கொண்டு நாராயண புரத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். பொன்மலைமீது நீலமலை எழுந்தருளியதுபோல் கருடன் மீது எழுந்தருளினான் இறைவன்.

திசை குலுங்க இசைக்கருவிகள் முழங்கின. தேவமாதர் நடனம் புரிய, கந்தர்வர் இசை பாட, இந்திராணி குடை பிடிக்க, யட்சமாதர்

ஆலவட்டம் அலைக்க, சிலர் விருது கூறிச் சோபனம் பாட, வேறு சில மங்கையர் மங்கள ஆரத்தி எடுக்க, முனிவர்கள் வேதம் ஓத, தேவர்கள் மலர்மாரி சொரிய, திருமலைவாசியான இறைவன் நாராயணபுரத்தின் அருகில் வருவதைக் கண்குளிரக் கண்டான் பத்மினியின் வளர்ப்புத் தந்தையான அரசன்.

உடனே அரசன் தன் புதல்விக்கு மங்கள நீராட்டுச் செய்விக்க வேண்டுமென்றும் மணக்கோலம் செய்ய வேண்டுமென்றும் கட்டளையிட்டான். பணிப்பெண்கள் நறுமணத் தைலம் தேய்த்தார்கள். நன்னீராட்டினார்கள். ஈரம் புலர நறும்புகை ஊட்டினார்கள். கஸ்தூரி பூசிப் பின்னி நறுமலர் மாலை சூட்டினார்கள். கலவை அணிவித்தார்கள். கோசிகப் பொன்னுடை உடுப்பித்தார்கள். நெற்றியில் திலகம் இட்டார்கள். விழிகளுக்கு மை இட்டார்கள். அடிகளுக்குச் செம்பஞ்சு ஊட்டினார்கள்.

அரசன் கண்களிக்கக் கண்டு 'யானைமீது ஏற்றி நகர்வலஞ் செய்யுங்கள்' என்று கட்டளையிட்டான். பாங்கியர்கள் சோபனம் பாட, மற்ற நங்கையர் ஆலவட்டம் வீசினார்கள். வீணை யாழ் முதலிய கீத வாத்திய விநோதங்கள் தழைக்கப் பத்மினி பெருங் கூட்டத்துடன் நகர்வலம் வந்தாள்.

அச்சமயம் திருமலைப் பெருமானின் கூட்டம் வந்து சந்தித்தது. முனிவர் யோகியர் தேவர் அரசர் முதலியோர் உடன் திரண்டு வர ஸ்ரீநிவாசப் பெருமானும் பத்மினி என்ற அலர்மேல் மங்கையும் பவனி வந்தார்கள். வீதிகளில் எல்லாம் மங்கையர் மங்கல விளக்குகள் எடுத்து நின்றனர். அனைவரும் அரண்மனை வாசலுக்கு எதிராக வந்து சேர்ந்தனர்.

ஸ்ரீநிவாசப் பெருமானும் பத்மினி நங்கையும் மகிழ்ச்சியோடு மாலை மாற்றிக் கொண்டனர். மணிகளால் அலங்கரித்த மண்டபத்தினிடையே அமைந்ததொரு சிங்காசனத்தின்மீது ஸ்ரீநிவாசனும் பத்மினியும் அமர்ந்தனர். அரசன் வசிஷ்டர் முதலான நான்மறை அந்தணர்களை உடன் இருக்கச் செய்து தானும் தனக்கு உரிய ஆசனத்தில் அமர்ந்தான்.

வசிஷ்டர் கிரியைகளை நடத்தி அண்ணல் ஸ்ரீநிவாசனுக்கும் அலர்மேல் மங்கைக்கும் மங்கலக்காப்பு நாண் சாத்தினார். பொற்கும்பம் வைத்து அருகில் பாலிகை நிறுவினார். பிறகு அக்கினி வளர்த்து ஆகுதி செய்தார். அரசனை அருகே இருக்கச் செய்து மருமகனைப் பூசிக்கச் செய்தார். அரசன் தன் திருமகளை மடிமீது இருத்தி அவள் கையைப்பற்றி ஸ்ரீநிவாசன் கையில் கொடுத்தான். அப்பெருமானும் பத்மினியின் கையைப் பற்றிக்கொண்டே அக்கினியை வலம் வந்து திருமங்கல நாணைப் பூட்டினான்.

அறுசுவை உண்டி யாவர்க்கும் வழங்கப் பெற்றது. பத்து நாள் திருமணவிழா நடைபெற்றது. திருமண வைபவங்கள் முற்றுப்

பெற்ற பின் ஸ்ரீநிவாசன் திருமலைக்குப் பத்மினியுடன் செல்லவேண்டு மென்று தீர்மானித்தான். அரசன் வரிசைகள் செய்து தன் மகளை நோக்கி, 'சிவிகையில் ஏறி உன் தோழியருடன் செல்வாய்' என்று அனுப்பிவைத்தான்.

ஸ்ரீநிவாசப் பெருமான் கருடன்மீது ஏறிப் புறப்பட்டான். விண்ணவரும் முனிவர்களும் பிறரும் வழிபட்டு வழிவிட்டனர். துந்துபி முழங்க, கீதநாதங்கள் இன்னிசைக் கடலாக ஒலிக்க, முத்துக் குடை நிழல் செய்ய இறைவன் புறப்பட்டபோது தன் மாமனாகிய மன்னனை நோக்கி, 'உனக்கு வேண்டுவதைச் சொல்லுக' என்றான்.

அரசனுக்கோ ஒன்றும் தோன்றவில்லை. ஏதாவது குறை இருந்தால் அல்லவா அதை நிறை செய்துகொள்ள விரும்புவான்?

'அரசர்க்கு அரசே! தேவாதிதேவா! உன்னுடைய மலரடியில் என் உள்ளம் என்றும் தங்குமாறு அருள்புரிய வேணும்' என்று பிரார்த்தித்துக் கொண்டான். இறைவனும் 'அப்படியே' என்று அருளித் திருமலையை நோக்கி விரைந்தான்.

வேங்கட மலை சேர்ந்ததும் இறைவன் ஆனந்தநிலைய விமானத்தில் எழுந்தருளியிருந்து பத்மினி என்ற அலர்மேல் மங்கைமீது பேரருளும் பேரன்பும் பொழிந்தான். வகுளமாலிகை மீதும் அருள் பொழிந்து அவள் பணியை மெச்சி விடை கொடுத்தான். இப்படி ஸ்ரீநிவாச கல்யாணத்தைச் சூதமுனிவர் என்ற பௌராணிகர் நைமிசாரணிய வாசிகளான முனிவர்களுக்கு உரைத்தார் என்று திருவேங்கடத் தல புராணத்தின் 39-ம் அத்தியாயம் தெரிவிக்கிறது. சூதமுனிவர் இந்தக் கல்யாண வரலாற்றை ஆதிவராக மூர்த்தி பூமிப் பிராட்டிக்கு உரைத்ததாகக் கூறி முடிப்பதையும் காண்கிறோம். இது வராக புராணப் பொருள் என்று இந்தத் திருமண அத்தியாயம் முற்றுப் பெறுகின்றது.

# 7. உலக அன்னையும் மகாலட்சுமி வழிபாடும்

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பது தமிழ்ச் சிறுவர்களுக்கும் பிரியமான ஒரு வாக்கியமாகும். அப்பனைக் காட்டிலும் அன்னையை அதிக பக்தியுடன் போற்றுவது இயற்கை தான். இந்தியா தெய்வத்தையும் அன்னையாக வழிபடும் விருப்பம் உள்ள நாடு.

### உலகமும் உலக அன்னையும்

பழைய சீனாவிலும் கருணைத் தெய்வம் ஒன்றை அன்னையாக வழிபட்டு வந்தார்கள். அந்தத் தேவி மைத்திரேய புத்தரின் ஒரு

தோற்றமாக மதிக்கப் பெற்ருள். அந்த அன்னையைக் குழந்தைகளுக் கெல்லாம் அதிதேவதையாகப் போற்றினர்கள். மிருகங்களைக் காப் பாற்றும் ஜீவகாருணியமூர்த்தியாகவும் சிறப்பித்துப் பேசினர்கள். ஏறக்குறைய இத்தகைய ஸ்தானம் நமது மகாலட்சுமிக்கும் உரியதுதான்.

மகாலட்சுமியும் கருணைத் தெய்வம்தானே. குழந்தைகளையும் குழந்தையுள்ளம் படைத்தவர்களையும் சிறப்பாகக் கருணைகூர்ந்து காப்பாற்றும் தெய்வம் திருமகள். பசுக்களைக் காப்பாற்றி ஆரோக்கிய நிலையில் பால் பொங்கச் செய்யும் கருணையும் திருமகளுக்கு உரியது என்பர். எனவே ஜீவகாருணியத்தின் அதிதேவதையும் மகாலட்சுமிதான்.

எகிப்து தேசத்திலும் ஓர் அழகுத் தெய்வம் வழிபடப் பெற்றதாகத் தெரிய வருகிறது. கிரீஸ் நாட்டில் சமுத்திரத்தின் அதிதேவதையை ஒரு ராணி ஆக்கி வழிபட்டார்கள். ஜப்பானின் தலைநகரான டோக்கியோவிலே ஒரு கோவிலில் ஐந்தடி உயரம் உள்ள ஆயிரம் விக்கிரகங்கள் ஒரு தேவிக்கு அமைக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொரு விக்கிரகத்திலும் கைகள் பல மக்களுக்கு வரப்பிரசாதங்களை வழங்குவதுபோல் அமைந்திருக்கின்றன. இந்த வழிபாடுகள் எல்லாம் நமது மகாலட்சுமி வழிபாட்டை ஒருவாறு நினைவூட்டுகின்றன எனலாம்.

கிறிஸ்தவர்களில் கத்தோலிக்க வகுப்பினர் கிறிஸ்து பகவானின் அன்னையாகிய மேரியை உலக மாதாவாக வழிபடுகிருர்கள். மகாலட்சுமியை நம்மவர் கருணையின் தெய்வம் ஆக்கியிருப்பது போல், கத்தோலிக்கர் அன்னை மேரியையும் அருளின் சொரூபமாகப் போற்றுகிருர்கள். லட்சுமி தேவியைப்போல் அன்னை மேரியும் ஆண்களும் பெண்களுமாகிய மக்களைத் தெய்வ சந்நிதிக்குக் கொண்டு போகிருள்; தன்னுடைய இந்தக் குழந்தைகளுக்காகக் கடவுளிடம் 'சிபாரிசு' செய்கிருள்.

## இந்தியாவும் அன்னை வழிபாடும்

நீண்ட காலமாகத் தேவி வழிபாடு இந்நாட்டிலே அனுஷ் டானத்தில் இருந்திருக்கிறது. அன்னை வழிபாடு ஆரியரல்லாதார் வழிபாடு என்று ஊகிக்கும் ஆராய்ச்சிக்காரர்களும் உண்டு. ஆரியர் களின் குடும்ப வழி தந்தைவழி ஆனதால் தாய்வழிக் குடும்ப முறையைப் பின்பற்றி வந்த ஆரியரல்லாதவர்களின் ஆதி வழிபாடுதான் அன்னை வழிபாடு என்கிருர்கள். பழைய வேத காலத் தெய்வங்களெல்லாம் புருஷர்களே என்றும், பிற்கால வேத மார்க்கத் திலேதான் பூமியையும் இயற்கையையும் அன்னையாக வழிபடத் தொடங்கினர்கள் என்றும் சுட்டிக் காட்டுகிருர்கள். நாலாம் வேதமாகிய அதர்வணவேத காலத்திலே ஆரியர்களின் நாகரிகமும் பண்பாடுகளும் ஆரியர் அல்லாதவர்களின் நாகரிகத்துடனும்

பண்பாடுகளுடனும் கலந்துவிட்டனஎன்பர். மலேயாளத்தில் வழங்கும் 'மருமக்கள் தாயத்'தைச் சுட்டிக்காட்டி, அது ஆரியரல்லாதவர்களின் அதிபுராதனக் குடும்ப முறையின் ஒரு மிச்சம்தான் என்று ஊகிக்கிருர்கள். மலேயாளத்தில் இன்றும் பகவதி என்ற தேவி வழிபாட்டுக்குச் சிறப்பான ஆதரவு உண்டு என்பதையும் நினைவூட்டுகிருர்கள்.

இந்தப் பகவதி வழிபாடு நம் தமிழகத்திலும் வழங்கி வந்தது என்பதற்குப் பின்வரும் ஒரு பழைய செய்யுட் பகுதியும் சான்ருகும்:

மாயிருந் தானை
மயிடன் தலேயின்மேல்—அம்மானய்
பாயின சிறடிப்
பாவை பகவதிக்கே—அம்மானய்

[மயிடன்-மகிஷன்; மகிஷாசுரன். சிறடி-சிறிய அடிகள்.]

மகாலட்சுமிக்கும் பகவதி என்ற பெயர் உண்டு. திருமாலேப் பகவான் என்பதுபோல் மகாலட்சுமியைப் பகவதி என்று குறிப்பிடுவதும் உண்டு.

வங்கநாட்டில் அன்னே வழிபாடு இன்னும் சிறப்பான நிலேயில் வழங்கி வருகிறது என்பதை நாம் நன்கு அறிவோம். 'இதுவும் ஆரிய நாகரிகத்திற்கு முற்பட்ட திராவிட நாகரிகத்தின் ஒரு சேஷம்தான் என்பர். கிருத்திவாசர் இயற்றிய வங்காளி ராமாயணம் ராமபிரான் ராவணனே வெல்லப் போவதற்குமுன் தேவியை வழிபட்டதாகக் கூறுகிறது. விஷ்ணுவையும் சிவபெருமானேயும் கூட வங்காளிகள் தனியாக வழிபடவில்லே யென்று அறிஞர் ஏ. ஸி. பானர்ஜி சுட்டிக்காட்டுகிருர்.

நம் தமிழ் நாட்டிலும் சிவத்தைச் சக்தியுடன் சேர்த்தே வழிபடுகிருர்கள். திருஞான சம்பந்தரின் தேவாரத்திலே இந்த அம்மையப்பர் வழிபாட்டைச் சிறப்பாகக் காணலாம். தமிழ்நாட்டு ஸ்ரீ வைஷ்ணவமோ திருமாலேத் திருவுடன் அதாவது ஸ்ரீதேவி என்ற லட்சுமியுடன் சேர்த்து வழிபடுவது பிரசித்தமல்லவா?

எனினும் துர்க்கை அல்லது காளிக்கு வங்காளிகள் அளித்திருக்கும் பெருமையை வேறு இந்திய மாகாணத்தினர் அளித்திருப்பதாகத் தெரியவில்லே. இந்துக்களின் தெய்வ சக்திகளெல்லாம் திரண்டு ஒருமுகமாய்க் காளியாகி விட்டதாக வங்க அறிஞர்கள் கருதுகின்றனர். மகிஷாசுரமர்த்தனியின் சிறந்த சிற்பங்களே வங்காளத்திலும் ஒரிஸாவிலும் நேப்பாளத்திலும் அதிகமாய்க் காணலாம். இந்தத் துர்க்கைக்கு லட்சுமி அம்சமும் உண்டு; பார்வதி அம்சமும் உண்டு.'

ஒரு காலத்தில் தேவி வழிபாடு தென்னிந்தியாவிலும் பரவியிருந்து தேவியின் சிறந்த சிற்பங்களையும் உருவாக்கியிருக்கக் கூடும் என்பதற்கு மாமல்லபுரத்திலுள்ள மகிஷாசுர மர்த்தனியின் அதிசய உருவக் காட்சி ஒப்பற்ற சான்ருகும். இத்தகைய தேவியைத்தான் சிலப்பதிகாரத்தின் ஆசிரியரான இளங்கோவடிகள் 'இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு' என்று சிறப்பித்துப் பேசுகிருர். இந்த வருணனையில் தேவி உபாசகர்களின் உள்ளம் அப்படியே பிரதிபலிக்கக் காண்கிருேம். இத்தகைய தேவி வழிபாடுதான் பண்டைத் தமிழர்களின் கொற்றவை வழிபாடும்.

ஆனல் இந்த வழிபாடு சைவ சித்தாந்தத்திற்கோ, வைணவ சித்தாந்தத்திற்கோ பொருத்தமானதன்று. சைவ சித்தாந்தக் கொள்கையில் காளி 'இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு' அல்லள்; இறைவனுடன் ஆடித் தோற்று அடங்கி ஒடுங்கிப் போனவள்தான்!

'ஆடு!' என்று துணிந்து கட்டளையிட்டாள் காளி. அவள் இஷ்டப்படியே அவளுக்கு அடங்கி ஒடுங்கிக் கூத்தாடினராம் சிவபெருமான். அதுகண்ட தேவி 'இறைவனையும் ஆடல் கண்டேன்; ஆடல் கண்டருளினேன்!' என்றெல்லாம் இறுமாந்து எண்ணமிட்டாளாம். இதுதான் கொற்றவை வழிபாடு,—மகாகாளி வழிபாடு. சைவ சமயத்தின் நடராஜ வழிபாட்டிலோ இத்தகைய தேவிக்கு இடம் கிடையாது.

'ஆடு!' என்று சொல்லி விட்டாள் காளி அசட்டுத் துணிவுடன். இறைவனும் ஆடத் தொடங்கிவிட்டான், அவளுடைய செருக்கை அடக்குவதற்காக, அவளுக்குப் புத்தி கற்பிப்பதற்காக. ஊர்த்வ தாண்டவம் என்ற நடனம் ஆரம்பமாகிவிட்டது. ஒரு கால் பாதாளத்தையும் ஊடுருவிச் செல்ல, மற்றக் கால் வானவெளியில் அண்டங்களையும் கடந்து சென்றுகொண்டே யிருந்ததாம். அந்த ஆட்டத்திலே தோள் ஒன்றே திக்குகளையெல்லாம் போர்த்தது மட்டுமல்ல, பேர்க்கவும் தொடங்கிவிட்டதாம். 'வேருெரு தோளுக்கு இடம்தான் எங்கே?' என்ற நிலைமையும் ஏற்பட்டுவிட்டது. இந்த நெருக்கடியில் இறைவனை ஆடல் கண்டருளக் காளிக்கு இடம் எங்கே? திறம்தான் எங்கே? எனவே பழைய தேவி வழிபாட்டுக் கொள்கையைச் சித்தாந்தக் கொள்கைகள் வென்று வலியழித்து விட்டன என்றே சொல்ல வேண்டும்.

இந்தியாவின் வடக்குக் கோடியில் காஷ்மீரத்திலே ஒரு தேவி கோவில் இருக்கிறது. இந்தத் தேவியை ஜகத் அம்பா (உலக அன்னை) என்ற பெயராலேயே குறிப்பிடுகிருர்கள். காஷ்மீரத்தின் தலைநகரமான ஸ்ரீநகரிலிருந்து சுமார் 15 மைல் தூரத்தில் உள்ள இக்கோவில் அன்னை வழிபாடு காஷ்மீரம் வரை எட்டியிருந்ததற்கு ஒரு சான்ருகும்.

## வடக்குக் கோடியிலும் தெற்கு முனையிலும்

அழகும் வசீகரமும் வாய்ந்த திவ்ய ஸ்தலம் இது என்றும், பல்வேறு சாதுக்களும் தொண்டர்களும் பல நூற்றுண்டுகளாக இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் இந்த க்ஷேத்திரத்திற்கு யாத்திரை போயிருக்கிறுர்கள் என்றும் சொல்லுகிறுர்கள். ஸ்ரீநகரிலிருந்து ஓர் இயற்கைச் சித்திரம் போன்ற பள்ளத்தாக்கினூடே செல்லும் பாதை ஒரு தடாகத்தைச் சுற்றிச் செல்லுகிறதாம். இப்பாதை முடிவில் லடாக் பிரதேசத்திற்கும் திபேத்திற்கும் போய்ச் சேர்கிறது. தடாகத்தைச் சுற்றிக் காந்நர்பால் என்ற இடத்திற்குச் செல்லும் முக்கிய வழியிலிருந்து இரண்டு மைல் தூரம் விலகியிருப்பது தேவியின் திவ்ய ஸ்தலம் என்கிறுர்கள்.

இந்தத் தேவி கோவிலுக்குப் போகும் பாதையிலுள்ள ஒரு தூய ஊற்றுக்கு விசாரம் என்று பெயர். விசாரம் என்ற இந்த வடசொல்லுக்கு ஆராய்ச்சி என்று பொருள். சிறிது அப்பால் வைராக்கியத்தின் அறிகுறியான பெயருள்ள தலங்கள் இருக்கின்றனவாம். குறுக்கு வழியிலுள்ள தடாகத்தை ஆஞ்சார் தடாகம் என்பர். இப்பெயர் நன்னடத்தைக்கு அறிகுறியாக இருக்கிறதாம். கடைசியாக யாத்திரிகர்கள் ஜகதம்பாவின் ஆலயத்தில் பிரவேசிக்கும்போது, உண்மையான தாயன்பு என்ற அன்னையின் பக்தியை விவேக வைராக்கியங்களுக்கும் நன்னடக்கைக்கும் ஏற்ற ஒரு சிகரமாக அடைகிறுர்களாம்.

கன்னியா குமரியும் உலக அன்னையின் நினைவுக் குறியான தேவி வழிபாட்டை நினைவு ஊட்டுவதுதான். இந்த அன்னையைத்தான் பாரதியார்,

*நீலத் திரைக்கடல்*
*ஓரத்தி லேநின்று*
*நித்தம் தவம்செய்*
*குமரி*

என்று குறிப்பிடுகிறுர். காஷ்மீரம் முதல் கன்னியா குமரிவரை ஒரு காலத்தில் தேவி பழிபாடு பரவி இருந்தது என்பதற்குக் காஷ்மீரிலுள்ள ஜகந் அம்பா கோவிலும், கன்னியா குமரியிலுள்ள குமரி அம்மன் கோவிலும் சிறந்த சான்றுகளாகும்.

இந்தத் தேவி வழிபாட்டில் மகாலட்சுமியின் வழிபாடும் இடம் பெற்றிருந்திருக்க வேண்டும் என்பது திண்ணம். காஷ்மீரத்தின் தலைநகரான ஸ்ரீநகர் என்ற பெயரே ஸ்ரீதேவி என்ற மகாலட்சுமியின் பெயரை நினைவூட்டுவதுதானே.

## சங்கரரும் மகாலட்சுமியும்

சங்கரரும் மகாலட்சுமியைக் குறித்துப் பாடி யிருப்பதாகச் சொல்லுகிறுர்கள். இவர் இயற்றியதாகக் கருதப்படும் சுலோகம்

ஒன்று சிருஷ்டிக்கெல்லாம் தாய் என்று மகாலட்சுமியைக் குறிப்பிடுகிறது. திக்குயானைகள் ஆகாய கங்கையின் தெளிவான அழகிய தீர்த்தத்தைப் பொற்கலங்களில் எடுத்து மகாலட்சுமியை நீராட்டியதாகவும் இந்தச் சுலோகம் குறிப்பிடுகிறது.

மேலும் மகாலட்சுமியை எல்லாப் படைப்பிற்கும் நாதனுக உள்ள பகவானுடைய தர்ம பத்தினி என்றும் இந்தச் சுலோகம் சுட்டிக் காட்டுகிறது. அமுதம் பிறந்த கடலின் மகள் என்றும் இங்கே லட்சுமிதேவி சிறப்பிக்கப் பெறுகின்ருள். இத்தகைய தேவிக்கு 'ஒவ்வொரு நாளிலும் காலை வேளையில் நான் பிரார்த்தனை செலுத்துகிறேன்' என்கிருராம் சங்கரர். அத்வைத வேதாந்தத்தை நிலை நிறுத்தி அதற்கு இசைந்த பேருரை என்ற பாஷ்யமாகிய நுண்ணறிவுப் பொக்கிஷத்தைத் தந்திருக்கும் அந்தச் சங்கரரோ இவர் என்பது ஐயத்திற்கு உரியதுதான். அந்த ஆசாரிய பரம்பரையில் வந்த ஒரு சங்கரர் லட்சுமி ஸ்தோத்திரச் செய்யுளாகிய இந்தச் சுலோகத்தைப் பாடி யிருக்கக்கூடும் என்று கருதுவதே பொருந்தும் எனத் தோன்றுகிறது.

### வேறு லட்சுமி தோத்திரங்கள்

பிற்காலத் தமிழிலும் லட்சுமி ஸ்தோத்திரங்கள் உண்டு. இந்தத் தோத்திரங்களிலும் மகாலட்சுமி உலக அன்னையாகப் போற்றப் பெறுவதைக் காண்கிறேம். ஒரு தமிழ்ப் பாட்டில் செந்தாமரையில் அரசிருக்கும் மயில் என்று திருமகள் வருணிக்கப் பெறுவதுடன், இவளுடைய கடைக்கண் அருள் படைத்துத்தான் நான்முகக் கிழவனுகிய பிரமனும், படைத்தல் தொழிலைச் செய்து வருகிருன் என்ற கருத்தையும் காண்கிறேம்.

அது மட்டுமா? திருமால் ரட்சகத் தொழில் புரிவதற்கும் திருமகளின் கடைக்கண் அருள் காரணம் என்கிருர் இப்புலவர்.

கடைக்கண் அருள் படைத்தன்றே
மணிவண்ணன் உலகமெலாம்
காவல் பூண்டான்?

என்கிருர்.

படைத்தனன் நான்முகக்கிழவன் என்று கூறியதுடன் சிவபெருமானின் சங்காரசக்திக்கும்—அதாவது, விடுவிக்கும் சக்திக்கும்—திருமாமகளின் கடைக்கண் அருளே காரணம் என்கிருர் இப்புலவர் :

படைத்தனன் நான் முகக்கிழவன்,
பசுங்குழலில் மதிபுனைந்த
பரமன் தானும்

துடைத்தனன்; நின் பெருஞ்சீர்த்தி
எம்மனோ ராலெடுத்துச்
சொல்லற் பாற்றோ?

அடுத்த பாட்டில் இப்புலவர், மகாலட்சுமியின் அருள் நோக்கம் படைத்தவர்களே பெருமன்னர்களாகவும் பெருந்தலைவர்களாகவும் திகழமுடியும் என்கிறார். கல்வியிற் சிறந்தவர்களுக்கும் லட்சுமியின் அருள்நோக்கம் இன்றியமையாதது என்கிறார். பேரறிவு பெறுவதற்கும் இந்த அருள்நோக்கம் வேண்டும் என்கிறார். கட்டழகு பெறுவதற்கும் மகாலட்சுமி என்ற அழகுத் தெய்வத்தின் அருள்நோக்கம் அவசியம் என்கிறார். வீரர்களுக்கும் லட்சுமி கடாட்சம் இன்றியமையாதது என்கிறார். மகாலட்சுமி பாக்கிய லட்சுமியாகவும் அழகு லட்சுமியாகவும் விளங்குவதுபோல், ஞானலட்சுமியாகவும் வீர லட்சுமியாகவும் விஜயலட்சுமியாகவும் திகழ்கின்றாள் என்பது குறிப்பு.

### இராமலிங்கர் போற்றும் மகாலட்சுமி

அருட்பிரகாச வள்ளலார் என்று புகழப்பெறும் இராமலிங்க அடிகளும் லட்சுமியை ஸ்தோத்திரம் செய்து பேறு பெற்றிருக்கிறார். இவர் பாட்டுள் ஒன்று,

உலகம்புரக்கும் பெருமான்தன்
உளத்தும்புயத்தும் அமர்ந்தருளி
உவகையளிக்கும் பேரின்ப
உருவே! எல்லாம் உடையாளே

என்று மகாலட்சுமியை விளித்துப் போற்றுவதைக் காண்கிறோம்.

இதே பாட்டில் 'கரும்பே! தேனே! கனிந்த செங்கனியே!' என்றும் இத்திருமகளைப் போற்றி நெருங்கி உறவாடப் பார்க்கிறார்.

தெவிட்டா(து) அன்பர் உளத்துள்ளே
தித்தித்(து)எழும்ஓர் தெள்ளமுதே!

என்று இந்த உலக அன்னையை இவர் உளமாரப் போற்றுவதும் இவருக்குள்ள லட்சுமிபக்தியை நன்கு புலப்படுத்துகிறது.

'வாழ்வே!' என்கிறார். 'என் கண்மணியே!' என்றும் கொஞ்சுகிறார். இப்படி நெருங்கி உறவாடும்போதும் திருமகளை நோக்கி,

வருத்தம் தவிர்க்க வரும்குருவாம்
வடிவே!

என்று போற்றுவதையும் காண்கிறோம். இதைத் தொடர்ந்து 'ஞான மணி விளக்கே!' என்று இவர் அழைப்பதும் கவனிக்கத் தக்கது.

வைணவர்களைப் போல் திருமகளுக்குக் குருஸ்தானமும் அளிக்கிறார் இராமலிங்க அடிகள். வைணவக் கொள்கைக் கிணங்க, திருமகளைக் 'கருணை பொழி தடங்கண் திருவே!' என்றும் அழைத்துப் பரவசமாகிறார். 'தாயே! சரணம் சரணம்' என்று அடிகள் அடைக்கலம் புகுவதையும் கண்டு இவரது பரந்த சமரச மனப்பான்மையைப் பாராட்டுகிறோம்.

# 8. தாய் தரும் செல்வம்

தாயின் மடியிலிருக்கும் குழந்தைக்குக் கவலை ஏது? திருமகளின் உண்மையான பக்தர்களும் இதே நிலையில் இருக்கிறார்கள். தாயின் மடியை விட்டு இறங்கிக் குழந்தை விளையாடிக்கொண்டிருக்கும்போது, தாய் வேறு வேலைகளைப் பார்க்கப் போகிறாள். குழந்தை பசியினாலோ அல்லது வேறொரு காரணத்தினாலோ அழும்போது, தாய் ஓடிவந்து குழந்தையை மடியில் வைத்துக் கொள்ளுகிறாள். அல்லது இடுப்பில் வைத்துக்கொண்டு உலாவுகிறாள். இந்த உண்மையையும் லட்சுமி பக்தர்கள் அறிந்து தருணத்தில் பயன்படுத்திக்கொள்கிறார்கள்.

'நான் யார்? ஒரு குழந்தை; இரவில் அழுது கொண்டிருக்கும் குழந்தை; ஒளி காணாது அழுதுகொண்டிருக்கும் குழந்தை. அழுகை தவிர வேறு பாஷை தெரியாத குழந்தை' என்று ஆங்கிலக் கவிஞர் ஒருவர் பாடியிருக்கிறார். அழுகை தாயாருக்குப் புரியும் பாஷை என்பதை அறிந்திருக்கும் லட்சுமி பக்தர்கள் மக்களுக்கும் மகாலட்சுமிக்கும் உள்ள உறவு பற்றிக் கொண்டிருக்கும் கொள்கையும் இது.

### துர்க்கா லட்சுமி

ரௌத்திர பாவத்தில் லட்சுமித் தாயே துர்க்கையும் ஆகின்றாள். ரௌத்திர பாவம் சாந்தமுற்று அருள் நோக்கம் பரவும்போது துர்க்கையே லட்சுமி ஆகிறாள்; உமாதேவி ஆகிறாள். இது தேவி பக்தர்களான பேரறிஞர்களின் கருத்து. எனவே தேவியின் தந்திர நூல்கள் துர்க்காதேவியை மங்கள வடிவமானவள் என்றும், கருணை மயமானவள் என்றும் குறிப்பிடுவதைக் காண்கிறோம். 'நீயே வைணவி; சத்தியும் வீரியமும் நீயே!' என்றும் தந்திர நூல்கள் தேவியை நோக்கி முறையிடுகின்றன. சைவ முறைப்படி சக்தியை உபாசிக்கும்போது சக்தி உமாதேவியாகவும், வைணவ முறைப்படி ஆராதிக்கும்போது சக்தி மகாலட்சுமியாகவும், தந்திர சாஸ்திர முறைப்படி ஆராதிக்கும்போது சக்தி துர்க்கையாகவும் காட்சி வழங்குகிறாள் என்பர்.

'சக்திதன் வடிவு ஏது என்னில் தடையிலா ஞானமாகும்' என்று கூறுவதுண்டு. ஆகவே சிவஞானம்தான் சக்தி என்கிறார்கள்.

இது சிற்சக்தி என்றும் சொல்லப்படுகிறது. சிற்சக்தி வித்தை ஆகிற சரஸ்வதியாகவும், பொருளாகிற லட்சுமியாகவும், வெற்றியாகிற துர்க்கையாகவும் காட்சி வழங்கக் காணலாம் என்றும் சொல்லுகிறார்கள்.

இறைவனுடைய சக்தி வித்யா சக்தியாவது போல் லட்சுமி சக்தியும் ஆகிறது. 'உலகத்தைக் காக்கும் திருவுள்ளத்தோடு இறைவன் வீற்றிருக்க, அவன் சக்தி லட்சுமியாகிறது' என்பர். அழிக்கும் திருவுள்ளத்தோடு இருக்க, அவன் சக்தி துர்க்கையாகின்றது. 'எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்!' என்ற வாக்கின் பொருள் கூர்ந்து நோக்கத் தக்கது.

சாதாரணமாக, வெற்றியோடும் பொருளோடும் நிற்கும் லட்சுமியை லட்சுமிதுர்க்கை என்றும், துர்க்கா லட்சுமி என்றும் அழைக்கிறார்கள். இப்படியே சரஸ்வதிதுர்க்கையும் உண்டு; ருத்திர துர்க்கையும் உண்டு. ருத்திர துர்க்கைக்குப் பத்துக்கைகளும் சரஸ்வதி துர்க்கைக்கு எட்டுக் கைகளும் லட்சுமி துர்க்கைக்குப் பதினெட்டுக் கைகளும் உண்டு என்கிறார்கள். லட்சுமி துர்க்கையை 'அஷ்டாதசபுஜ ஸ்ரீ மகாலட்சுமி துர்க்காதேவி' என்று கூறுவதும் உண்டு.

லட்சுமிதுர்க்கையின் பதினெட்டுக் கைகளிலும் பதினெட்டு ஆயுதங்கள் உண்டு. 'அவற்றை வலதுகை கீழ்ப்புறமிருந்து வரிசையாக இடதுகை கீழ்ப்புறம் வரையில் எண்ணிப் பார்க்க, அவை முறையே அட்சமாலை, கமலம், பாணம், சக்தி, வச்சிரம், கதை, சக்கரம், திரிசூலம், பரசு, சங்கு, மணி, பாசம், சக்தி, தண்டம், கேடயம், வில், பானபாத்திரம், கமண்டலம் என்பனவாம்' என்று லட்சுமிதுர்க்கையின் வைபவம் குறித்து எழுதப்பெற்றிருக்கும் கட்டுரை ஒன்று தெரிவிக்கிறது.

இந்த ஆயுதங்களில் பாணம் முதலிய பன்னிரண்டு ஆயுதங்கள் காமம் வெகுளி முதலிய சத்துருக்களை ஒழிப்பதற்கு நினைவுக்குறி என்பர். சங்கு, மணி ஆகியவை வெற்றிக்குறி என்பர். அட்ச மாலை கமண்டலம் முதலியன அம்மையின் சாந்த சொரூபத்தைக் காட்டும் என்பர். கமலம் தியானிக்கும் சித்தம் இப்படி மலர்ந்திருக்கும் என்பதற்கு அறிகுறி என்பர்.

எருமைத் தலையின்மேல் துர்க்கா லட்சுமி நிற்பது ஆணவ மலத்தின் வலிமையை அடக்கி யிருக்கும் நிலைமையைப் புலப்படுத்துகிறதாம். தேவி தாமரையின் மேல் நிற்கும்போது எப்போதும் தியாகம் செய்யும் அன்பர்களின் உள்ளத் தாமரையில் தேவி வீற்றிருக்கிறாள் என்பதை நினைவூட்டுகிறதாம்.

இத்தேவி செம்பவளத் திருமேனியளாய், தாமரை ஆசனத்தில் வீற்றிருப்பதாக ஒரு தியான மந்திரம் தெரிவிக்கிறது. இந்த லட்சுமி-துர்க்கையைத் தக்க முறையில் உபாசிப்பவர்கள் அஷ்ட லட்சுமி கடாட்சத்தையும் அடைவார்களாம். சித்திகளை இனிது பெறுவார்

களாம். இத்தேவி தன் தொண்டர்களுக்குத் தலைமைப் பதவியை அருளுகிறாள் என்பதும் பக்தர்களின் நம்பிக்கை. இத்தேவியின் அருளால் வறிஞன் செல்வனாகிறான், மந்தன் மதியூகி ஆகிறான் என்றும், ஊமன் கவிஞன் ஆகிறான் என்றும் தேவி மான்மியம் தெரிவிக்கிறது.

துர்க்கா லட்சுமி மங்கள சாந்த நிலையில் காட்சியளிக்கிறாள். தோற்றம் கம்பீரமானது. எனினும் தேவியின் உள்ளம் அமைதியாக மங்களம் தருவதிலேயே ஈடுபட்டிருக்கிறது. இந்த நிலையில் இத்தேவியைத் தருமை ஆதீனத்தில் தருமபுரீசுவரர் ஆலயப் பிராகாரத்தின் வாயு மூலையில் ஒரு கோயில் அமைத்துப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள்.

## நல்லவை தரும் நாயகி

மகாலட்சுமியை வேறு சொரூபங்களில் ஆராதிப்பவர்களும் உண்டு. எந்தச் சொரூபத்தில் ஆராதித்தாலும் 'அம்மை' என்ற அடிப்படைக் கருத்துடன் பக்தி பூண்டு ஒழுகவேண்டும். இத்தாயின் அடிமலர்களின் சோபையிலேதான் சகல சௌகரியங்களும், சௌக்கியங்களும், நவநிதிகளும் உதிக்கின்றன என்பர். நிதி பதி, புத்திரர் மித்திரர், தவிசு பவுசு, காயசித்தி ஞான சக்தி முதலான சௌபாக்கியங்களையும் அருளுவன மகாலட்சுமியின் திருவடி மலர்களே.

குழந்தை காலையில் விழித்ததும் அதன் முதல் எண்ணம் தாயின் திருமுகம்தானே. அம்மாவின் புன்னகை புரிந்த முகத்தில் தவழும் கருணையும் அருளும் குழந்தையை ஆட்கொள்ளுகின்றன. குழந்தையுடன் கொஞ்சத் துடிக்கும் செவ்விதழும், அந்த விலாச நெற்றியும், அதில் திகழும் குங்குமமும், புல்லாக்கு அணிந்த மூக்கும் குழந்தையுள்ளத்தில் அழியாத சித்திரமாகப் பதிந்துவிடுகின்றன. உலகத்தாயாகிய மகாலட்சுமியின் பக்தரும் இத்தகைய குழந்தை போலிருக்கிறார்கள்.

குழந்தை அழும்போதும் கூப்பிடும்போதும் அம்மா வந்துவிடுவதுபோல், பக்தன் அழுதும் தொழுதும் மனம் உருகித் தோத்திரம் செய்து மகாலட்சுமியின் திருப்பெயர்களைப் பாடிக்கொண்டிருக்கையில் இந்த அம்மாவும் ஓடி வந்துவிடுகிறாளாம். இந்த மகாலட்சுமி எங்கும் வியாபித்திருந்து குழந்தைகளாகிய பக்தர்களுக்கு அருள் செய்யக் காத்திருக்கிறாளாம். ஆம்; தாயின் தத்துவம் உலகமெங்கும் பரந்திருப்பதுதான். இவளைக் காணும் பார்வை ஒன்றுதான் தேவை. ஆர்வத்தாலும் ஞானத்தாலும் அந்தப் பார்வையைப் பெறலாம்.

இத்தாயே நல்லவை தரும் நாயகி. நமக்கு நல்லவை எவை என்பதைத் தாயே அறிவாள் என்பது பக்தர்கள் மனநிலை. இந்த மனநிலை இல்லாமல் 'அது வேணும், இது வேணும்' என்று ஓயாமல் இச்சைகளைப் பெருக்கிக்கொண்டே லட்சுமித் தாயைப் பூசிப்பது

சரியன்று. ஆணவப் பேய்க்கும் அன்புத் தாய்க்கும் ஒருங்கே பூசை போட யாரால் இயலும்? அடிமைக்கு விடுதலை உண்டு; ஆனால் உள்ளத்திலே கள்ளத்திற்கு அடிமைப்பட்டால் முடிவும் உண்டோ?

நல்லவை வேண்டுமென்றால், தீங்கு அணுகாதிருக்க வேண்டுமென்றால் லட்சுமியைத் தியானிக்கவேண்டும். தாயின் கருணைக்கு எல்லை இல்லை என்பதை நன்குணர்ந்து கொள்ளவேண்டும். கல்லைக் கனியாக்கும் கருணை உலக அன்னைக்கு உரியது என்ற நம்பிக்கையில் நிலைபெற வேண்டும். மகாலட்சுமியைக் 'கருணாம்பிகை' என்று கூறுவது பொருத்தமே.

நல்லவை தரும் இந்த நாயகியின் கருணைஎல்லாருக்கும் உரியது; சிலருக்குத்தான் சிறப்புரிமை என்பது இல்லை. மக்களைத் தாங்கி அருளும் தாய் தன் மக்களிடையே வேற்றுமை பாராட்டுவதுண்டோ? எனினும் அன்பர்க்கு, மெய்யன்பர்க்கு இக்கருணை விசேஷமாய்ப் பயன்படும். பொய்யரைத் தண்டிக்கவும் செய்யும். கருணையே மறக் கருணையாகித் தீயோரையும் பொய்யர்களையும் தண்டிக்கும் என்பதைப் பல வேறு புராணக் கதைகள் வற்புறுத்துகின்றன.

திடபுத்தியுடன் திடபக்தியும் சேர்ந்து கொண்டால் மகாலட்சுமியின் திருவருட் சிறப்பைப் பிரத்தியட்சமாக அறிந்து கொள்ளலாம் என்பர். 'தாயே! என்னை ஆண்டருள்வாய்; அம்மணீ! காத்தருள்வாய்; மனம் திருந்தச் செய்வாய்' என்று உறுதி யுள்ளத்துடன் பக்தி செய்வோருக்கு, எப்போதும் நல்லது செய்யத் துணைபுரிகின்றாள் திருமகள். 'நீயே துணை; கைவிடாதே; விதிவழி செல்லட்டும் என்று விட்டுவிடாதே' என்று தாயைப் போற்றினால், தாய் தன் திருவடியை அருளிக் காப்பாற்றுவது திண்ணம்.

'தாயே! அடைக்கலம்—அதாவது உனக்கே நான் அடைக்கலம். அம்மையே! சரணம். கமலையே! சரணம். நிமலையே! சரணம். பத்மாசனி! போற்றி. மங்கலை! போற்றி' என்றெல்லாம் போற்றுகிறவர்களுக்கும், 'கருணைவாரி! நமோநம; ஜயஜய,! ஆரணி! மங்களம். பூரணி! மங்களம். சுந்தரி! மங்களம்' என்றெல்லாம் வழிபடுகிறவர்களுக்கும், 'எழில் அரசி! வாழி. எல்லாச் செல்வங்களுக்கும் இருப்பிடமே! வாழி, வாழி நின் நாமம்; வாழி நின் திருவடி' என்றெல்லாம் வாழ்த்துகிறவர்களுக்கும் மகாலட்சுமி அருள் புரிவாள் என்பதில் ஐயமில்லை. இத்தகைய மெய்யன்பர்களின் மனம் 'பட்ட மரம் தளிர்த்தது! கல்லும் கனிந்தது!' என்பது போன்ற அற்புத நிலையில் தழைத்துப் பேறு பெறும் என்பர்.

நல்லவை தரும் நாயகியாகிய மகாலட்சுமிக்கு அடியவர் மனமே கோவில் என்றும், அடியவர்களே பரிவாரமும் படையும் என்றும் கூறுவதுண்டு.

*திருமாலின் மார்பகத்துச்*
*செல்வி! போற்றி*

என்பது இப்படை வீரர்களின் யுத்த கோஷம். இந்தக் கோஷத்தால் கவலை பயம் முதலிய அசுரகணங்கள் வெல்லப்படும் என்பது நிச்சயம்.

## நவராத்திரியும் மகாலட்சுமியும்

நவராத்திரி ஒரு கலைத் திருநாள்; சக்தி பூஜையுடன் கொண்டாடும் கலைத் திருநாள். ஒன்பது நாட்களில் துர்க்கை லட்சுமி சரஸ்வதி ஆகிய மூவகை ரூபமாக மகாசக்தி நவராத்திரி காலத்தில் வழிபடப் பெறுவதைக் காண்கிறோம். எனவே, சக்தி மகாசரஸ்வதி என்றும் மகாலட்சுமி என்றும் மகாகாளி என்றும் சொல்லப்படுகிறாள். மகாகாளியை இச்சாரூபம் என்றும், மகா சரஸ்வதியை ஞானரூபம் என்றும் சொல்லி, மகாலட்சுமியைக் கிரியாரூபமானவள் என்று சொல்லுகிறார்கள். இம்மூன்று தத்துவங்களும் ஒன்று சேர்ந்ததே சண்டி என்ற சண்டிகா தேவி என்பர்.

குணங்கள் அற்ற பிரமம் குணங்களை ஏற்றுக்கொண்டு சகுணப் பிரமமாகக் காட்சி வழங்குவதுபோல், சண்டிகா தேவியும் மகாலட்சுமியாகக் காட்சி வழங்குகிறாளாம். ஆனால் இந்த மகாலட்சுமி ஸ்ரீ வைஷ்ணவர்கள் வழிபடும் திருமாலின் தேவியான மகாலட்சுமி அல்லள். தாந்திரிகர்கள் என்ற தந்திர சாஸ்திர நிபுணர்களின் மகாலட்சுமி இவள். இவளையே மகிஷாசுர மர்த்தனி என்கிறார்கள். இந்த மகாலட்சுமியின் சுத்த சத்துவ அம்சம்தான் மகாசரஸ்வதி என்றும், சுத்த தாமச அம்சம்தான் மகாகாளி என்றும் சொல்லுகிறார்கள். இதைப்பற்றி 'நவராத்திரியின் கதைகள்' என்ற நூலில் ஏற்கெனவே பிரஸ்தாபித்திருக்கிறோம்.

தாந்திரிகர்களின் மகாலட்சுமி சுந்தரியாகவும் பயங்கரியாகவும் ஒருங்கே காட்சி யளிக்கிறாள். இவளுடைய அருள்வெள்ளம் பொங்கிப் பெருகி வாழ்விப்பது போல் அழிப்பதும் உண்டு. இவள் அன்பு தென்றலாகத் தவழ்வது போல் சண்டமாருதமாகச் சுழன்று வீசி மண்ணையும் விண்ணையும் புழுதிப் படுத்துவதும் உண்டு. ஆனால் வைணவர்களின் மகாலட்சுமியோ திருமாலின் திருத்தேவி; இவள் சீறி அழிப்பதில்லை. இவள் என்றும் சுந்தரிதான்.

அறியாமையுடனும் மிருகத் தன்மையுடனும் துஷ்ட அசுர சக்திகள் மகிஷாசுரனின் தலைமையில் உலகத்தைப் பாழாக்கி வந்த காலத்திலே மும்மூர்த்திகளும் கூட அஞ்சித் தங்கள் மக்களைக் கைவிடத் தீர்மானித்து விட்டார்கள் என்றும், எனினும் அவர்களுடைய தேவிமார் தாய்க்குலமானதால் எப்படியாவது மக்களைக் காப்பாற்றிவிட வேண்டுமெனத் துணிந்தார்கள் என்றும் நவராத்திரி கதை ஒன்று கூறுகிறதல்லவா? அந்தத் தாய்மார்களில் மகாலட்சுமி

முக்கியமான பங்கை மேற்கொண்டாளாம். லட்சுமியும் பார்வதியும் சரஸ்வதியும் துர்க்கா லட்சுமி என்ற ஓருருவத்தில் வெளிப்பட்டார்களாம். துர்க்கா லட்சுமி ஒன்பது நாள் விரதம் பூண்டிருந்து பத்தாம் நாளில் மகிஷாசுரனை வென்று மகிஷாசுர மர்த்தனியாக வெற்றிக் கோலத்தில் திரும்பி வந்தாள் என்று நவராத்திரி கதை தெரிவிக்கிறது.

பயங்கரிதான் மகிஷாசுர மர்த்தனி. அந்தக் கொடிய போர் அப்படி ஆக்கிவிட்டது இந்த உலக அன்னையை. எனினும், இந்தப் பயங்கர சொரூபத்தையும் ஊடுருவிக் கிடந்ததாம் சௌந்தரியம்—உலகங்களை யெல்லாம் மோகிக்கச் செய்யும் சௌந்தரியம். இந்தச் சௌந்தரியம் அழகுத் தெய்வமாகிய லட்சுமி தேவிக்கு உரியது தான். மகிஷாசுர மர்த்தனியின் ஞானம் சரஸ்வதி தேவிக்கு உரியது; அப்படியே மகிஷாசுர மர்த்தனியின் மோகன சக்தி திருமாமகளின் கொடைதான்.

நவராத்திரியின் கதைகளில் பெரும்பாலும் சக்தி தேவியின் புகழே பேசப்படுகிறது. எனினும் லட்சுமி தேவியைப் பற்றிய பிரஸ்தாபமும் இடையிடையே வருவதைக் காணலாம். உதாரணமாக, மது கைடபர்களின் மதிமயக்கம் பற்றிய கதையைப் பார்க்கலாம். இக் கதையில், திருமாலை யோக நித்திரைக்கு உட்படுத்தி யிருந்த அந்த நித்திராதேவி ஒரு மகா மோகன சொரூபியாக வெளிப்பட்டு அசுரர்களை மயக்குவதைக் காண்கிறோம். இவளை ஜோதி ரூபமான வைஷ்ணவி என்றும் கதை சொல்லுகிறது.

இந்த யோகநித்திரா தேவியின் அழகு லட்சுமியின் அழகுதான் என்று ஊகிக்கலாம். 'அழகிய பொருள்கள் எல்லாவற்றையும் விட நீ மிக்க அழகு வாய்ந்தவள்' என்று போற்றினான் பிரமதேவன். இத்தகைய பாராட்டு அழகுத் தெய்வமாகிய மகாலட்சுமிக்குத்தானே உரியது.

அழகு கலைஞர்களையும் நல்லவர்களையும் வாழ்விக்கிறது; துஷ்டர்களை மயக்கிக் கெடுக்கிறது. எத்தகைய சக்தியாலும் எதிர்க்க முடியாத துஷ்டர்களையும் அழகின் மோகன சக்தி எதிர்த்து மயக்கி மாய்த்து விடுகிறது. உலகங்களை வென்றும் புலன்களை வெல்லத் தெரியாத மதுகைடபர்களை வென்று விடுகிறது யோகநித்திராதேவி என்ற மகா மாயையின் அழகு. இந்த அழகு தேவி சொரூபத்தின் அம்சமான மகாலட்சுமியின் அழகுதான் என்பது குறிப்பு.

சண்டிகா தேவியின் பேராற்றலைப் போல் பேரொளி வனப்பும் தேவிக்கு வெற்றி தருவதைக் காண்கிறோம். இவளது வீர சௌந்தரியத்தில் வீரம் துர்க்கைக்கும், சௌந்தரியம் லட்சுமிக்கும் உரியன எனலாம். விண்ணிலும் மண்ணிலும் காணப்படுகிற அழகுகளெல்லாம் மகாலட்சுமியின் அழகுகளே என்று கூறுவதுபோல் சண்டிகா தேவியின் அழகுகளையும் மகாலட்சுமியின் அழகுதான் என்று கூறு

வதில் தவறொன்றுமில்லை. தளிர்க்கையில் வாள் பிடித்து வந்த தேவியைத் தியானிக்கும் பக்தர்கள் அந்தத் தளிர்க்கையில் லட்சுமியையும், வாளில் துர்க்கையையும், அந்த உறுதி உள்ளத்தில் சரஸ்வதியையும் தரிசித்தார்கள் எனலாம்.

'காலனுக வந்த காதல்' என்பதும் நவராத்திரி கதைகளில் ஒன்று. சும்பன், நிசும்பன் என்ற அசுரர்களை அழிப்பதற்குத் தேவி ஆயுதத்தைப் பயன்படுத்திக் கொண்டதுபோல் தன் அழகையும் காட்டி மயக்கி உலகத்தை வாழ்வித்தாள் என்று கதை தெரிவிக்கிறது. தேவியின் இந்தப் பேரழகு அழகுத் தெய்வமாகிய லட்சுமியின் அழகுதானே. அசுரர்களின் வீர வெறியை அவர்களுடைய காம வெறியே அழித்தது என்று சொல்லும்படி அல்லவா தேவியின் இந்தப் பேரழகு திகழ்ந்தது?

நவராத்திரி கொலுவின் தத்துவத்திலும் லட்சுமியின் அழகுத் தத்துவத்திற்கு ஒரு சிறப்பான இடம் உண்டு. அம்பிகையின் விக்கிரகம் எவ்வளவு அழகாய் அலங்கரிக்கப் பெறுகின்றது! வீடுகளில்தான் பொம்மைகளை எத்தனை வகைகளில் கொலு வைத்து அலங்காரம் செய்கிறோம்! கன்னிகைகளில் ஒவ்வொருத்தியும் அலங்காரம் செய்துகொண்டு வீடு வீடாகச் செல்லும்போதும், வந்த பெண்களுக்குச் சந்தனம் தாம்பூலம் மஞ்சள்குங்குமம் முதலியவற்றை வழங்கும்போதும் லட்சுமியின் ஒளியும் அழகும் அங்குமிங்கும் திகழ்வது போன்ற ஓர் உணர்ச்சி ஏற்படத்தான் செய்கிறது.

விஜயதசமி கொண்டாடும்போதும்,காளியின் வெற்றிப் பெருமிதத்துடன் லட்சுமியின் சௌந்தரிய வெற்றியும் நினைவிற்கு வருகிறது. ஆலயங்களில் அம்பு போடும் ஐதிகத்திலும், அரசர்கள் தர்பார் கூட்டி மாலைவேளையில் அம்பு போடச் சென்ற வழக்கத்திலும் கூட மகாசக்தி மகாலட்சுமியாகவும் தரிசனமளித்தாள் என்று சொல்லலாம்.

## தாயின் செல்வச் சிறப்பு

லட்சுமித் தாய்க்கு அழகே செல்வம். உண்மை - ஐசுவரியமே அழகு. பிறவிக்கு முந்திய நிலையிலிருந்து உயிர்பெற்று விழிக்கும் மனிதன் தாயின் மடியிலே விழித்துக்கொள்ளுகிறுன். வாழ்க்கையின் அதிகாலை வேளையில் தாயின் முகமலர்ச்சியைக் கண்டு கொள்ளுகிறுன். 'தாயின் அழகே அழகு, தாய் தரும் செல்வமே செல்வம்' என்ற உணர்ச்சி மேலும் மேலும் உறுதிப் படுகிறது.

பூவைப் பார்க்கிறுன்; தாயின் புன்னகைப் பொலிவுதான் அது! சந்திரனைப் பார்க்கிறுன்; தாயின் முகசந்திரன்! நட்சத்திரங்களைப் பார்க்கிறுன்; தாயின் வயிரமணிகள் அவை! எல்லையற்ற வானவெளி அவள் பரந்த நெற்றியையும், நீலக்கடல் அவள் கூந்தலையும் நினைவூட்டுகின்றன. பெற்ற தாய் உலகத் தாயாகிய மகாலட்சுமியை நினைவூட்டுகிறுள்.

தாய்ப்பால் பருகி வளர்ந்திருக்கும் மனிதன் இயற்கையன்னையின் அழகைப் பருகி நுட்பமான ஆன்ம வளர்ச்சியும் பெறுகின்ருன். தாய்மையின் பெருமையுடன் உலக அன்னை வழிபாட்டின் உட்பொருளையும் மக்கள் எதிர்காலத்திலே அதிக அளவில் உணர்ந்து கொள்வார்கள் என்று கருதலாம்.

இயற்கையன்னை தன் அழகால் இதயத்திற்கு உணவு தருவது போல் வயிற்றுப் பசிக்கும் ஏராளமான உணவை உதவுகிருள். தாகத்திற்குத் தண்ணீர் தருகிருள்; மூச்சுக் காற்றைத் தருகிருள்; சூரிய ஒளி என்ற உணவையும் தருகிருள். இப்படியெல்லாம் இயற்கைத் தாய் உதவவில்லை என்ருல், மனிதன் எப்படி வாழ முடியும்? தாய் செய்த உதவிகளை நினைத்துப் பார்த்தால்,

அன்னம் ஊட்டிய
தெய்வ மணிக்கையால்
ஆணை காட்டில்,
அனலை விழுங்குவோம்!

என்று சொல்லவும் தோன்றுகிறதல்லவா? இயற்கைத் தாயாகத் தன்னை வெளியிட்டுக்கொள்ளும் மகாலட்சுமி விஷயத்திலும் இத்தகைய உணர்ச்சி ஏற்பட வேண்டும்.

தன் உடலையும் உயிரையும் குழந்தைக்காகத் தியாகம் செய்யத் துணிந்தவள் தாய். இந்தத் தாயுள்ளம் குறித்துச் சிந்தித்துப் பார்க்கும் உண்மைப் புதல்வன்,

'போற்றி தாய்' என்று
தோள்கொட்டி ஆடுவிர்,

என்ற பாரதி வாக்கின் உட்பொருளை நன்குணர்ந்து கொள்வான்.

தாய்க்குலமாகிய பெண்குலத்தின் பெருமையை உலகம் நன்குணர்ந்து போற்றும்போது, பெண்மையிலும் தாய்மையிலும் உலக அன்னையின் சக்திக்கும் அருளுக்கும் சான்று காண்பது எளிதாகும். பெண்மையையும் தாய்மையையும் போற்றத் தெரியாத இதயத்திற்கு உலக அன்னையாகிய லட்சுமி பக்தியும் தெளிவு படுவதில்லை. . . .

பாரதியார் புதுமைப் பெண் குறித்துப் பாடிய தமது பாட்டிலே, உலகத்தைப் புதுமையுறச் செய்யும் ஆற்றல் புதுமைப் பெண்ணொளிக்கே விசேஷமாக உரியது என்கிருர். பராசக்தி தேவியே ஒரு புதுமைக் கன்னிகையாய்த் தம் அகக் கண்ணுக்கு இலக்காகி இந்த உண்மையை உணர்த்தியதாகவும் சொல்லுகிருர்.

ஆற்றல்கொண்ட பராசக்தி
அன்னைநல் அருளினுல் ஒரு
கன்னிகை ஆகியே

தேற்றி உண்மைகள் கூறிட
வந்திட்டாள்; செல்வம் யாவினும்
மேற்செல்வம் எய்தினோம்

என்பது பாரதி வாக்கு.

பெண்மையின் பெருமையை உள்ளவாறு உணர்ந்துகொண்ட பாரதியார் பராசக்தி அன்னையின் வழிபாட்டையும் உய்த்துணர வைத்திருப்பது எவ்வளவு பொருத்தமானது! டாக்டர் அனிபெஸன்ட் ஒரு சமயம் உலக அன்னையைக் குறித்துப் பேசும்போது, 'இந்த அன்னையை அறிவால் ஒரு தெய்வ அம்சம் என்று அறிந்துகொள்வது போதாது; தாய்மையின் சக்தி முழுமையும் சொருபமாய்க் கொண்ட ஒரு பிரத்தியட்ச தெய்வமாக உலக அன்னையை மறவாது வழிபட வேண்டும்' என்றார். பாரதியாரின் பராசக்தி இத்தகைய உலக அன்னைதான். மகாலட்சுமியும் இத்தகைய உலக அன்னையாகவே வழிபடுவதற்கு உரியவள் ஆவள்.

பராசக்தியைக் குறித்துப் பாடும் பாரதியார், 'யாதுமாகி நின்றாய்' என்கிறார். 'எங்கும் நீ நிறைந்தாய்' என்கிறார். காளிதேவியின் லீலையே உலகம் எனக் காண்கிறார்.

பூதம்ஐந்தும் ஆனாய்-காளி!
பொறிகள் ஐந்தும் ஆனாய்;
பேதமாகி நின்றாய்—காளி!
பொறியை விஞ்சி நின்றாய்!

என்றெல்லாம் பாரதியார் பாடும் காளி உலகமெலாம் ஒருயிராய்த் தழுவிக் காக்கும் அன்னைதான். இத்தகைய அன்னைதான் தன் அழகுச் சிறப்பாலும் செல்வச் சிறப்பாலும் உலகை அணி செய்திருக்கும் மகாலட்சுமியும்.

பராசக்தியை 'ஆனந்தத்தின் எல்லையற்ற பொய்கை' என்று போற்றும் பாரதியார் இந்த அன்னையின் மகாசக்தியையும் மகத்தான அருளையும் ஒருங்கே உணர்ந்து பாடியிருக்கிறார்.

நம்பினார் கெடுவதில்லை,
நான்குமறைத் தீர்ப்பு;
அம்பிகையைச் சரண்புகுந்தால்
அதிகவரம் பெறலாம்

என்ற நம்பிக்கையுடன் பராசக்தியைப் பாரதியார் உலக அன்னையாகவும் பாரத சக்தியாகவும் தமிழன்னையாகவும் சுதந்திர தேவியாகவும் கண்டு களித்திருக்கிறார்.

லட்சுமி பக்தர்களுக்கும் உலக அன்னையாகிய லட்சுமி ஆனந்தத்தின் எல்லையற்ற சமுத்திரம். லட்சுமியின் அழகுக்கும் எல்லையில்லை; சக்திக்கும் எல்லையில்லை. மகா விசுவாசத்துடன் உபாசிப்பவர்களுக்கு மகாலட்சுமி நலன் தரும் செல்வங்களையெல்லாம் பொழிந்து கொடுக்கிருள் என்பதும், இந்த அம்மையைக் குழந்தையுள்ளத்துடன் சரண் புகுந்தால் நல்ல வரங்களையெல்லாம் அபரிமிதமாகப் பெறலாம் என்பதும் லட்சுமி பக்தர்களின் நம்பிக்கை.

பக்தன் லட்சுமியை உலக அன்னையாக மட்டுமா கண்டு களிக்கிருன்? தன் சொந்தத் தாயையும் மகாலட்சுமியாகக் காண்கிருன். தாய்மையில் சிறப்பாக மகாலட்சுமியைக் காண்பதுபோல் பெண்மையிலும் பொதுவாக லட்சுமியைக் காண்கிருன். இந்த உபாசகனுக்கு வீடும் லட்சுமி மயம்; ஊரும் லட்சுமி மயம்; நாடும் லட்சுமி மயம்; உலகமெல்லாம் லட்சுமி மயம்தான்.

### கொஞ்சமோ செல்வம்

லட்சுமியின் குடும்பம் மிகவும் பெரிது. எத்தனை மக்களை இந்தத் தாய் போஷிக்க வேண்டியிருக்கிறது, கவனிக்க வேண்டியிருக்கிறது! எனவே மகாலட்சுமி எப்போதும் சுறுசுறுப்பாய் இருக்கிருள் என்று கருதலாம். உலகமெல்லாம் இவள் வீடுதான்—பரமபதமும், பாற்கடலும், திருமாலின் மார்புந்தான் இவள் இருப்பிடம் என்பதில்லை. 'உயிர்க் குலமெல்லாம் என் குடும்பம்' என்று திருவாய் மலர்ந்தருளும் இந்த அன்னைக்கு அவளுடைய வீட்டுப் பணியில் நாமும் இயன்ற உதவி செய்யவேண்டுமல்லவா? இது திருமாமகளின் மெய்யன்பர்களுடைய மனநிலை.

ஏழை ஒருத்திக்குக் குடும்பம் பெரிதாக இருந்தால் குடும்ப பரிபாலனம் மிகவும் கஷ்டமானதுதான். மகாலட்சுமிக்கோ எல்லையில்லாத செல்வம் குடும்ப பரிபாலனத்திற்கு உதவச் சித்தமாயிருக்கிறது. மண்ணிலும் விண்ணிலும் உள்ள அழகுச் செல்வங்களுக்கும் பக்திச் செல்வங்களுக்கும் கணக்கு உண்டா?—அருட் செல்வத்திற்குத்தான் எல்லையுண்டா?

அன்னையின் அருள் சுரந்த கடைக்கண் பார்வை ஒன்றிலேயே எவ்வளவு செல்வம் இருக்கிறது, எவ்வளவு சக்தி கொழிக்கிறது! இந்த அருள்நோக்கைப் பெறுவோமானுல், நமக்கும் உலகப் பணி புரிய ஆற்றலும் வசதிகளும் கிடைக்கும். அன்னையின் உலகப் பணியில் நாமும் ஆனந்தமாக ஒத்துழைக்க முடியும். ஆம்; அன்னையின் பணிதான் ஆனந்தம். உண்மையான உலகப் பணி அன்னையின் பணிதான்.

'கைங்கர்ய ஸ்ரீ' என்று பணியையும் லட்சுமியின் அம்சமாகச் சொல்லுகிருர்கள். இது முற்றும் உண்மையானது. கைங்கரியம்

உயிர்; கைங்கரியம் வழிகாட்டி; நெறிகாட்டும் லட்சுமி; சக்தியின் இன்றியமையாத அம்சம். 'வாழ வேண்டுமா? அப்படியானால் பணி செய்து வாழுங்கள்' என்கிறது அன்னையின் குரல். 'கைங்கரியமாகக் கனியாத பக்தி மலடு!' என்கிறாள் அன்னை. இந்தக் குரலில் வாழ்க்கையின் நோக்கத்தையும் இரகசியத்தையும் ஒருங்கே வெளியிடுகிறாள் அன்னை தன் அருமை மக்களுக்கு. 'பணி புரிய வாழுங்கள்; வாழப் பணிபுரியுங்கள்!' என்ற அன்னையின் குரல் மோன வாக்காக மகாலட்சுமியின் மெய்யன்பர்களுடைய இதயத்திலே தெளிவாகக் கேட்கிறது.

அன்னையின் வடிவங்கள் பலவற்றுள் துர்க்கை வடிவம் மனித இதயத்தைப் பாழாக்கும் ஆணவம் பேராசை முதலான அசுர கணங்களை வென்று வலியழிக்கிறது. இந்தத் துர்க்கை வடிவம் கோபத்தைக் கோபிக்கிறது; பயத்தைப் பயமுறுத்துகிறது; துன்பத்திற்குத் துன்பம் ஆகிறது.

உலக அன்னையின் சரசுவதி வடிவம் அறிவு காட்டுகிறது; ஆராய்ச்சியைத் தூண்டுகிறது. அறியாமையை வெல்லுகிறது; அறியுந்தோறும் அறியுந்தோறும் அறியாமை காட்டி மெய்யறிவின் இயல்பையும் உணர்த்துகிறது. அறிவு தூய்மை பெறுவதற்கும் சரஸ்வதியின் அருள் வேண்டும். 'வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை' என்பதையும் நினைவூட்டுகிறாள் வெண்ணிற மேனியளான சரஸ்வதி. அறிவின் சிகரத்திலே குழந்தைபோல் இருக்க வேண்டும் என்பது இந்த அன்னையின் உபதேசம்.

உலக அன்னையின் மகாலட்சுமி வடிவமோ அழகுணர்ச்சியைத் தூண்டி அறிவையும் செம்மைப்படுத்துகிறது; சக்தியையும் செம்மைப் படுத்துகிறது. வரங்களையெல்லாம் கைம்மாறு கருதாத மேகம் போல் வரப்பிரசாதமாகப் பொழிகின்றது லட்சுமி வடிவம். குரு என்ற நிலையையும் இந்த அன்னையிடம் காண்கிறோம். குரு சீடர்களுக்கு அளிக்கும் செல்வத்தில் ஞானச் செல்வமும் உண்டு, அருட் செல்வமும் உண்டு. அருட் செல்வம் அதி முக்கியமானது. இந்த அருட் செல்வத்தைக் குருமூர்த்தி மகாலட்சுமியின் வரப்பிரசாதமாக வழங்குகிறார் என்பர்.

உலக அன்னைக்கு வடிவங்கள் பல; மூன்று வடிவங்கள் முக்கியமானவை. இந்த வடிவங்களெல்லாம் ஒரே அன்னையைத்தான் நினைவூட்டுகின்றன. ஞானிகள் பன்மையில் ஒருமையையும் ஒருமையில் பன்மையையும் காண்பார்கள் அல்லவா? உலக அன்னையின் பக்தர்களும் ஒரே தேவியை மகாலட்சுமி சரஸ்வதி காளி என்ற மும்மைப் பெருந் தெய்வங்களாகவும், இந்த மும்மைப் பெருந் தேவியரையும் ஒரே தெய்வமாகவும் காண்கிறார்கள்.

# 9. தாயே! எங்கே? எப்படி? எப்போது?

மகாலட்சுமியை எங்கே காணலாம்? எப்போது கண்டு வரம் கேட்கலாம்? எந்த வரத்தை எப்படிக் கேட்கலாம்? இப்படியெல்லாம் எண்ணமிட்டான் லட்சுமிதாசன். கதைகளில் தேடினான்—புராணக் கதைகளிலும் நாடோடிக் கதைகளிலும்தான். ஏட்டில் தேடினான்; எழுத்தில் தேடினான். பேச்சில் தேடினான்; பெருஞ் செயல்களில் தேடினான். இங்கும் தேடினான்; அங்கும் தேடினான்; எங்கும் தேடினான். கோயிலில் தேடினான்; குளக்கரை நதிக்கரைகளில் தேடினான். மாளிகைகளில் தேடினான்: அரண்மனைகளில் தேடினான்; குடிசைகளிலும் தேடிப் பார்த்தான். மலையில் தேடினான்; காட்டில் தேடினான்; கடற்கரையில் தேடினான்; கடலிலும் தேடிப்பார்த்தான். யாத்திரைகள் செய்தான்; இருந்த இடத்தில் இருந்தே தியானம் செய்தும் பார்த்தான்.

தேவியை மலைக்குகையில் காணவில்லை; மனக்குகையில் காண்பதற்கோ வழி தெரியவில்லை. நடந்த கால்கள் நொந்துபோயின; இருந்த இடத்திலே இருந்த உடம்பு இளைத்துப் போயிற்று. விருந்து வைபவங்களில் காணாத தேவியை விரதங்களிலும் கண்டுகொள்ள முடியவில்லை. அன்னதானம் சொர்ணதானங்களில் புலப்படாதவளைச் சேமித்து வைக்கும் செல்வத்திலும் காண இயலவில்லை.

பாற்கடலில் தேவி பிறந்தாள் என்றார் பௌராணிகர். செல்வச் செழிப்பும் வளங்களும் நிறைந்திருந்த பழைய இந்தியாவில்தான் மகாலட்சுமி தோன்றியிருக்க வேண்டும் என்ற கற்பனையுடன்,

மாமகட்குப் பிறப்பிடம்
ஆகமுன் வாழ்ந்(து)இந்நாளில்
வறண்(டு)அயர் பாரதம்

என்று பாரதியார் பாடியிருக்கும் அந்தப் பழைய இந்தியாவுக்கும் காலரதத்தில் ஏறிப்போய்த் தேடிப் பார்த்தான். பௌராணிகர்களின் சூட்சும லோகங்களுக்கும் போய்த் தேடினான், பாரதியார் உதவிய ஞானரதத்திலே. தாய் எங்கே? எப்போது காணலாம்? எப்படிக் காண முடியும்?

## பாரதியார் காட்டும் வழி

'அத்தனை உலகமும் வர்ணக் களஞ்சியமாகப் பல பல நல்லழகுகள் சமைத்தாய்!' என்று இறைவனை நோக்கிப் பாரதியார் பாடியிருக்கும் அந்தப் பாட்டின் உதவிகொண்டு இறைவியாகிய லட்சுமியை இயற்கையழகுகளில் காண விரும்பினான் லட்சுமிதாசன்.

லட்சுமியின் அழகுத் துணுக்குகள் அங்கும் இங்கும் எங்கும் அனைத்திலும் கலந்திருந்த போதிலும், உலகெலாம் தானாய் ஒளிரும் திருமாமகள் என்ற அந்த அமுத அன்னையைக் கண்டுகொள்ள முடியவில்லை. திருவின் காதல் திருமகளின் தாசனைப் படாத பாடெல்லாம் படுத்தியது. 'திருவே! உன்னைக் காதல் கொண்டேனே, உன் திரு உருவை மறவாதிருந்தேனே, பல திசைகளிலும் தேடித்திரிந்து இளைத்தேனே, மனம் வாடிக் களைத்தேனே, சதி செய்து மறைந்திருக்கிறாயே!' என்று பாரதியார் வாக்கை ஒட்டி அழுதான், தொழுதான்.

திருவின் அருளால் கிடைத்த செல்வத்தைக் கொண்டு 'உலகிலே பொன்யுகத்தை நிலைநிறுத்தத் துணிவேன்' என்று பிரார்த்தனை செய்து பார்த்தும், திருப்பெண்ணின் அருள் பெறுவது சாத்தியமாகத் தோன்றவில்லை.

'மலரின்மேவு திருவே—உன்மேல்
மையல்பொங்கி நின்றேன்'

என்று தன் ஆசையையும் எடுத்துரைத்தான் லட்சுமிதாசன்.

'கமலம்மேவும் திருவே—நின்மேல்
காதலாகி நின்றேன்'

என்றான், திருவின் அருள் எங்கேயோ தொலைதூரத்தில் இருப்பதாகவே தோன்றியது.

'இமய வெற்பில் மோத, நின்மேல் இசைகள் பாடி வாழ்வேன்' என்று பாடுகிறார் பாரதியார்.

வாணிதன்னை என்றும்—நினது
வரிசைபாட வைப்பேன்

என்றும் பாடியிருக்கிறார். லட்சுமிதாசனும் இசைகள் பாடிப் பார்த்தான். வசனத்திற்கு வசமாகாத திருமகள் கவிதைக்கு வசமாவாள் என்றும் தோன்றவில்லை.

திருமகளின் திருஉருவம் குறித்துப் பௌராணிகர்களின் கற்பனைகளுடன் புதுமைக் கவிஞரான பாரதியாரின் கற்பனைகளையும் சேர்த்துப் பார்க்க முயன்றான்.

நிலவுசெய்யும் முகமும்,—காண்பார்
நினைவழிக்கும் விழியும்,

கலகலென்ற மொழியும்,—தெய்வக்
களிதுலங்கு நகையும்,
இலகுசெல்வ வடிவும்

என்ற வாக்கிலே பிரதிபலிக்கும் திருஉருவத்தை அகக்கண்ணுக்கு இலக்காக்கிக் கொள்ள முயன்ருன்.

பொன்னும், நல்ல மணியும்—தெய்வப்
பூண்கள்ஏந்தி வந்தாய்

என்று பாரதியார் வருணித்திருக்கிறபடி அந்தத் திருமகள் பொன்னுபரணங்களும் இரத்தினுபரணங்களும் தன் செல்வ மேனியில் பூண்டிருப்பதாகவும் எண்ணிப் பார்த்தான்.

'அந்த மின்னும் வடிவில் அணிகள் நாணி அழகிழந்து போகுமே!' என்று எண்ணமிட்டான்.

நாணிஏக லாமோ?

என்று திருமகளைக் கேட்கிருர் பாரதியார். தன்நிலை கண்டும் வெட்கமுற்றுத் திருமகள் விலகிவிட்டதாகவே தோன்றியது லட்சுமி தாசனுக்கு.

இல்லையென்ற கொடுமை—உலகில்
இல்லையாக வைப்பேன்!

என்று கூறி அதற்காகச் செல்வம் வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்ட பாரதியாரைப் போல், லட்சுமிதாசனும் பிரார்த்தனை செய்து பார்த்தான்.

'முல்லைபோன்ற அந்த முறுவல்போதுமே என்குறை தீர்ப்பதற்கு!' என்று சொல்லியும் பார்த்தான். பார்த்த இடம் வெட்ட வெளியாகத்தான் இருந்தது; திருமாமகளைக் காணவில்லை.

நித்தம்உனை வேண்டிமனம்
நினைப்பதெல்லாம் நீயாய்ப்
பித்தனைப்போல் வாழ்வதிலே
பெருமை உண்டோ? திருவே!

என்று அழுது முறையிட்டுக் கொண்டான்.

'வேதம் உரைப்பதெல்லாம் சுத்த வெறும் பொய்யோடி? சுடர் மணியே! திருவே!' என்று புலம்பினுன். இந்தச் சோக இருளைப் பிறிக்கொண்டு நம்பிக்கையும் மின்னி வந்தது.

நின்அருளை வாழ்த்தி, என்றும்
நிலைத்திருப்பேன், திருவே!

என்ற பாரதியாரின் சங்கற்பம் நம்பிக்கையை உறுதிப்படுத்தியது.

ஈடுநினக்(கு) ஓர் தெய்வம் உண்டோ?
எனக்குனை அன்றிச் சரணம் உண்டோ?

என்ற பாரதியாரின் மனப்பான்மையுடன் முடிவில் திருமாமகளைச் சரணமடைந்து அந்த அருளுக்கு விசேஷ இலக்காகிவிட்டான் லட்சுமிதாசன்.

### சரண் புகுவதே வழி

பாரதியார் திருமகளின் அருளை வேண்டினுர்; ஆனுல் அதைப் பெற்ற துண்டோ? இப்படிக் கேட்பவர்களும் உண்டு. இவர்கள் பாரதியாரின் வறுமையையே நினைத்துக்கொண்டிருக்கிருர்கள்.

நித்தச் சோற்றினுக்கு
ஏவல் செயவந்தேன்;
நிகரி லாப்பெருஞ்
செல்வம் உதவினுன்

என்று கண்ணனை நோக்கிப் பாரதியார் கூறும் வாக்கின் உண்மையை இவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை. இந்த நிகரிலாப் பெருஞ் செல்வத்தைப் பாரதியாருக்கு வறுமைத் துன்பத்திற் கிடையே அருளியவள் திருமாமகள் என்று கருதுவதில் தடை உண்டோ? எனவே பாரதியார் திருமகளின் அருள் பெறக் காட்டியுள்ள வழியை நாம் தெளிவுபெறச் செய்து கொள்வது நலமாகும்.

'வாதனை பொறுக்கவில்லை—அன்னை மாமகள் அடியிணை சரண்புகுவோம்' என்று சரண்புகுந்தார் பாரதியார். துயரம் உள்ளவர்களும் துயரம் இல்லாதவர்களும் திருமகளைச் சரண மடைந்து பேறு பெறலாம் என்பது பாரதியின் அசையாத நம்பிக்கை. பாற்கடலில் அமுதுடன் பிறந்தவளுக்கு அமுதத்தின் பான்மை உண்டு. அவள் நமக்கு அமுதவாழ்வு அருளக்கூடும் என்கிருர் பாரதியார். செந்தாமரைப் பூவில் கொலுவிருக்கும் அழகுத் தெய்வம் நமது வாழ்வை அழகு செய்யும் என்கிருர்.

திருமகளுக்கும் திருமாலைப்போல் கைகள் நான்கு என்று புராணம் சொல்லுகிறதல்லவா? திருமால் ரட்சக மூர்த்தி ஆனதால் நாலு திசைகளில் உள்ள மக்களையும் தம் நாலு கைகளால் தழுவிக்

காப்பாற்றுகிறுன் என்பது புராணக் கதையின் உட்பொருள். திருமகளின் நான்கு கைகளும் உலகத்திற்கு அருள்புரியவே சித்தமாக இருக்கின்றன என்கிருர் பாரதியார்.

நாற்கரம் தான்உடையாள்—அந்த
நான்கிலும் பல்வகைத்
திருஉடையாள்

என்பது பாரதி வாக்கு. இந்தச் செல்வங்களையெல்லாம் நாலு திசைகளிலும் உள்ள மக்களுக்கு வாரி வழங்குகிருள் திருமாமகள் என்பது குறிப்பு. ஆனுல் சரணம் அடைவோருக்கே மகாலட்சுமியின் வண்மை உள்ளவாறு பயன்படுவதாகும்.

மகாலட்சுமி வழங்கும் செல்வங்களில் பொருட் செல்வத்தைக் காட்டிலும் முக்கியமானது அழகுச் செல்வம். இத்தேவியின் அபரிமிதமான அழகுச் செல்வங்களுக்கு மண்ணிலும் விண்ணிலும் காணும் வர்ண விசித்திரங்கள் ஒரு பெருஞ் சான்ருகும். இக் கருத்திற்கு இசைய மகாலட்சுமியின் திருஉருவம் அமைந்திருக்கிறது; அவள் உறைவிடமும் அமைந்திருக்கிறதாம்.

வேல்-கரு விழியுடையாள்—செய்ய
மேனியள் பசுமையை
விரும்பிடுவாள்

என்பது பாரதி வாக்கு. அருள் ததும்பும் நீண்ட கருநீல விழிகளுடன் சிவந்த மேனியளாய், பச்சைநிற மேனியனுகிய திருமாலின் மார்பிலே இணைந்திருக்கிருள், இசைந்திருக்கிருள் என்பது கருத்து.

இறைவனது திருமேனியைப் பொன்மேனியாக்கிக் கொண்டு இனிது வீற்றிருக்கும் திருமகளை முன்னிட்டுத்தான் இறைவனைச் சரணம் அடையவேண்டும் என்ற ஸ்ரீ வைஷ்ணவக் கொள்கை யையும்,

நாரணன் மார்பினிலே—அன்பு
நலன்தர நித்தமும் இணைந்திருப்பாள்

என்ற பாரதி வாக்கில் குறிப்பாகக் காண்கிருேம்.

## திருமகள் எங்கே?

'கடவுள் எங்கே?' என்று கேட்பது போலத்தான் திருமாமகள் எங்கே என்று கேட்பதும். நாராயணன் எங்கும் வியாபித்திருப்பது

போல் அன்பு வடிவமும் அருள் வடிவமும் ஆகிய அழகுத் தெய்வமும் எங்கும் வியாபித்திருக்கக் காண்கிறோம். கடலில் உள்ள மீன் 'கடல் எங்கே?' என்று கேட்பதுபோலத்தான் திருமகளின் இருப்பிடம் குறித்த கேள்வியும். எனினும் திருமாமகள் உகந்த இடங்கள் இவை என்று நூல்கள் கூறும் சில இடங்களைச் சிறப்பாகச் சுட்டிக் காட்டுகிறார்.

தோரணம் கட்டிய பந்தல்கள் அழகாய்க் காண்கின்றன அல்லவா? அந்தப் பந்தல்களில் லட்சுமி தங்குகிறாளாம்.

தோரணப் பந்தரிலும்—பசுத்
தொழுவிலும், சுடர்மணி
மாடத்திலும்

லட்சுமியைக் காணலாம் என்கிறார். நமக்குப் பால்தரும் பசு லட்சுமியின் அம்சம்தானும். ஜீவகாருணியத்திற்கு அறிகுறியாகப் 'பசு வாழ்க!' என்று கூறுவது நமது சமய மரபு. சுடர்மணி மாடங்களின் அழகிலும் ஒளியிலும் லட்சுமி தேவியின் அழகும் ஒளியும் பிரதிபலிக்கின்றனவாம்.

இந்த அழகுத் தெய்வத்தை வீரர்களின் தோளிலும் காணலாம் என்கிறார் பாரதியார். தொழிலாளிகளின் உழைப்பிலும்—அதாவது இன்றைய பாஷையில் பாட்டாளி மக்கள் படுகின்ற அரும்பெரும் பாடுகளிலும்—திருமகளைக் கண்டுகொள்ளலாம் என்கிறார்.

வீரர்தம் தோளினிலும்—உடல்
வெயர்த்திட உழைப்பவர்
தொழில்களிலும்

ஒளிபரப்பி அருள் புரிகின்றாளாம் திருமகள். ஆனால் வீரம் பரம சாத்விக வீரமாக இருப்பதே மேலானது, உழைப்பு இன்பமயமாக இயங்குவதே சிறந்தது என்ற கொள்கையையும் பாரதியார் பாடல்களில் காண்கிறோம்.

பொன்னிலும் நவமணிகளிலும் திருமகள் வாழ்கிறாள் என்ற கருத்து நம்மவர்களிடையே சர்வ சாதாரணமாக நிலவி வருகின்றது. பொன்னிலுள்ள அழகுத் தெய்வத்தைப் பூவிலும் காண்கிறோம். இரத்தினங்களில் விளங்கும் தேவி திருவிளக்கிலும் விளங்குகின்றாள். தூய உள்ளத்துடன் பெண்கள் சிரிக்கும் சிரிப்பிலும் திருமகள் திகழ்கின்றாள் என்கிறார் பாரதியார்.

பொன்னிலும் மணிகளிலும்—நறும்
பூவிலும் சாந்திலும்
விளக்கினிலும்

கன்னியர் நகைப்பினிலும்—செழுங்
காட்டிலும் பொழிலிலும்
கழனியிலும்
முன்னிய துணிவினிலும்

வாழ்ந்திடும் திருமகளை வாழ்த்திச் சரண் புகுவோம் என்கிறார் பாரதியார்.

'மன்னர் முகத்திலும்' திருமகள் வாழ்வதாகப் பாரதியார் பாடியிருக்கிறார். இவரே 'நாம் எல்லாரும் இந்நாட்டு மன்னர்' என்றும் வேறொரு இடத்தில் பாடுகிறார். வேறு இடங்களிலும் திருமகள் வாழ்வதைக் காணலாம் என்கிறார்.

மண்ணிலும் கனிகளிலும்—மலை
வாய்ப்பிலும், வார்கடல்
ஆழத்திலும்

திருமகள் வாழ்கிறாளாம்.

'புண்ணிய வேள்வி'யிலும் வாழ்கிறாளாம். புண்ணிய வேள்வி தியாகம்தான். உயர் புகழிலும் மதியிலும் புதுமையிலும் வாழ்கிறாளாம். ஆனால் புதுமைக்கும் புதுமையான அழகுத் தெய்வம் பழமைக்கும் பழமையானதுதான். பழமையிலும் 'என்றும் புதுமை' யைக் காணக்கூடுமல்லவா?

விக்கிரகத்தில் தான் திருமகளைக் காணலாம் என்பதில்லை; பதுமைகளிலும் காணலாம். தங்கப்பதுமைகளில்தான் காணலாம் என்பதில்லை; அழகான மண் பதுமையிலும் காணலாம், சித்திரப் பாவையிலும் காணலாம். பாட்டிலும் கூத்திலும் காணலாம். பாவிலும் பாவையிலும் காணும் தேவியை நாவிலும் மனத்திலும் நாட்டி வணங்குவோம் என்கிறார் பாரதியார்.

வெற்றி கொள்ளும் படையில் காணும் திருமகள் விநயம் அறிந்தவர் கூட்டத்திலும் காணப்படுகிறாளாம். நற்றவ நடையில் காணப்படும் திருமகள் நல்ல நாவலர் பாவலர்களின் இலக்கிய நடையிலும் காணப்படுகிறாளாம். இத்தாயை உவகையுடன் போற்றினால் உயர்ந்திடுவோம் என்கிறார். கலைஞர்கள் தம் கலைகளில் திருமகளின் கருணை ஒளி பெறுவார்களானால், அக்கலை கலி தவிர்க்கும் என்கிறார்.

இப்படிச் சிறப்பான இடங்களில் திருமகளைக் கண்டு சரண் புகுவது நலம் என்கிறார் பாரதியார். உறுதி உள்ளம் படைத்த வைராக்கிய ஞானிகள் எங்கும் திருமகளைக் கண்டு சரண் புகுந்து பெருவாழ்வு வாழ்வர் என்பதையும் உய்த்துணர வைக்கிறார்.

செல்வத் திருமகளைத்—திடங்கொண்டு
சிந்தனை செய்திடுவோம்

என்ற திடசங்கற்பம்தான் இன்றியமையாதது.

## சரணமடைவது எப்படி?

பக்தியினால் சரணமடைய வேண்டும் என்பதே பாரதியாரின் விடை. இப்படிச் சரணமடைந்தால் 'சித்தம் தெளியும்' என்கிறார். தெளிந்த சித்தம் மேலும் மேலும் வழிகாட்டிய வண்ணமாயிருக்கும். சரணாகதி செய்துவிட்டுச் சும்மா இருக்க வேண்டியதுதான் என்று சிலர் நினைக்கிறார்கள். உண்மையான சரணாகதி நிலையில் சோம்பி யிருப்பதற்கு இடமே கிடையாது.

செய்கை அனைத்திலும்
செம்மை பிறந்திடும்

என்பது உண்மையாகச் சரணாகதி செய்தோம் என்பதற்கு ஓர் அறி குறியாகும். நெஞ்சில் சஞ்சலம் நீங்கி உறுதி விளங்குவதும் ஒருநல்ல அடையாளமாகும். காமம் பக்திக் காதலாகும். இதுவும் ஓர் அடையாளம்.

இத்தகைய சரணாகதனைக் கண்டு 'பயம் பயந்து போகும்; சாவு செத்துப்போகும்!' என்று கூறுவதும் உண்டு. அச்சத்தைக் கொன்று பொசுக்கிவிடுகிறது பக்தி என்கிறார் பாரதியார். பக்தி செய்து தெய்வத்தைச் சரணமடைந்தால் 'பிணி தீரும்' என்றும் சொல்லுகிறார். 'தெய்வ வாழ்க்கை உற்றே இங்கு வாழ்ந்திடலாம்' என்கிறார். பொது வாகப் பக்தி குறித்துப் பாரதியார் இப்படிக் கூறுவதெல்லாம் லட்சுமி பக்திக்குப் பொருந்துவதுதான்.

'சரணமடைந்து பக்தி செய்யும் நிலையில் சோம்பல் அழிந்து உடல் சொன்னபடி நடக்கும்' என்கிறார். முடி சற்றும் கூம்புதல் இன்றி நல்ல கோபுரம்போல் நிமிர்ந்த நிலைபெறும் என்கிறார். பொய் மடியும், மெய் வெல்லும் என்கிறார்,—'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்று கூறிய கம்பனைப்போல. சரணாகதனான பக்தன் தான் மட்டுமா வாழ்கிறான்? பிறரையும் வாழ்விக்கிறான். இவனால் அண்டை அயலார் மட்டுமா வாழ்கிறார்கள்? ஊரார் நாட்டார் மட்டுமா வாழ்கிறார்கள்? சந்ததி வாழும் என்றும் பாரதியார் உறுதி கூறுகிறார். இத்தகைய நிலை சரணாகதி நிலை சரிதான் என்ப தற்குச் சான்று.

சரணாகதி புரிவோனுக்குத் தொழில் உண்டா என்று கேட்பது போல், கடமை உண்டா என்று கேட்பவரும் உண்டு. கடமையை நிஷ்காமமாகச் செய்தே தீரவேண்டும் என்று கட்டளையிடுகிறது பகவத்கீதை. ஆனால்,

கடமை அறியோம்;
தொழில் அறியோம்

என்று பாடுகிறார் பாரதியார். இது கீதையின் கொள்கையை மறுப்பதன்று. 'கடமை செய்கிறோம், தொழில் செய்கிறோம்' என்ற உணர்வும் இன்றியே சரணாகதன் பரோபகாரத்திலே, உலகப்பணியிலே, ஈடுபட்டிருப்பான் என்பது குறிப்பு.

கடமைநினைவும் தொலைத்துஇங்கு
களியுற்றுஎன்றும் வாழ்குவமே

என்ற பாரதி வாக்கு சரணாகதனுடைய நிலையை வெளியிடுவது தான்.

'பாடுபட்டு உழைத்தாலன்றோ வீடுகட்டி வாழலாம்?' என்கிறான் லோகாயதன். பாரதியாரோ,

இந்தப் புவிதனில்
வாழும் மரங்களும்
இன்ப நறுமலர்ப்
பூஞ்செடிக் கூட்டமும்,
அந்த மரங்களைச்
சூழ்ந்த கொடிகளும்
அவுடத மூலிகை
பூண்டுபுல் யாவையும்
எந்தத் தொழில்செய்து
வாழ்வனவோ?

என்று கேட்கிறார். இது சரணாகதி செய்து வாழ்வோன் கேட்கும் கேள்விதான். 'உனக்குத் தொழில் என்ன?' என்று கேட்டால் அன்பு செய்வதுதான் என்றே பதில் சொல்லுவான் சரணாகதன்.

சரணாகதனுக்கு இம்மையிலும் கவலை என்ற நரகம் கிடையாது. சென்றது மீளாது என்ற உறுதியுடன், ஒவ்வொரு நாளும் 'இன்று புதிதாய்ப் பிறந்தோம்!' என்ற உணர்வுடன் கடமையோ தொழிலோ செய்யும் உணர்ச்சி இன்றி உலகப் பணிசெய்து கொண்டே இருப்பான் சரணாகதன். பகைவனுக்கும் அருளும் பணி செய்துகொண்டே இருப்பான். இந்த நிலையை அடைவதற்கு உரிய வழியில் சரணாகதி செய்வதே முறையாகும். லட்சுமி சரணாகதி

முறையும் இப்படித்தான். லட்சுமியைச் சரணடைந்து 'திருவினை வென்று' வாழ்வதே லட்சுமி சரணாகதி முறை என்று கூறுவதும் பொருத்தமே.

### எப்போது சரணமடைவது?

துயரம் உள்ளவர்களும் லட்சுமி பக்தி செய்யலாம். துயரம் இல்லாதவர்களும் செய்யலாம் என்ற கருத்தை ஏற்கெனவே அறிந்திருக்கிறோம். இடறி விழுந்தவன் 'அம்மா' என்று சொல்வதற்கு நாளோ நேரமோ கணித்துப் பார்க்கவேண்டுமா?—என்று கூறிப் பகவானைக் கூவி அழைப்பதற்கு வேளையும் வேண்டாம் சடங்கும் வேண்டாம் என்று பெரியோர்கள் கூறுவதுண்டு. இந்தக் கூற்று அன்னையாகிய லட்சுமியைச் சரணமடைவதற்குப் பெரிதும் பொருந்தும் என்பதைச் சொல்லவா வேண்டும்?

பாரதியாருக்கு 'லட்சுமி காதல்' இளமையிலேயே உண்டாகி விட்டது. ஆதியில் பிள்ளைப் பருவத்திலே 'கலைமகள் காதல் தவிர வேறு காதலுக்கு இவர் உள்ளத்தில் இடமில்லைதான். இருபத்திரண்டு வயது ஆனபின் பணக்கவலை வந்துவிட்டது; அந்த நிலையில் லட்சுமி பக்தியும் வந்துவிட்டது என்று பாடுகிறார்.

இந்த நிலையினிலே—அங்கொர்
இன்பப் பொழிலின்
இடையினில் வேறொரு
சுந்தரி வந்து நின்றாள்

என்று தாம் கனாக்கண்ட லட்சுமியைக் குறிப்பிடுகிறார்.

'அவள் ஜோதி முகத்தின் அழகினைக் கண்டு என்தன் சிந்தை திறை கொடுத்தேன்' என்கிறார். இவர் கேட்காமலே அவள் தன் பெயரைச் சொல்லி விட்டாளாம்.

செந்திரு என்று
பெயர்சொல்லி னாள்

என்கிறார்.

'செந்திரு' என்ற பெயரிலேயே செம்பொன் மீது பாரதியாருக்கு அந்த நாளிலுள்ள ஆசையும் கவலையும் புலனாகின்றன எனலாம். செந்திருவோ பொன்னும் மணிகளுமாக இவருக்குக் கொட்டிக் கொடுக்கவில்லை.

புன்னகை செய்திடுவாள்—அற்றைப்
போதுமுழுதும் மகிழ்ந்திருப்பேன்!

என்று பாடியிருக்கிறார். ஏதோ சில ரூபாய்களைப் பார்த்ததுமே—அன்று செலவுக்குக் கிடைத்த சொற்பப் பொருளைப் பார்த்ததுமே—இவர் மகிழ்ந்து போய் விட்டாராம்.

பணம் கொஞ்சம் அதிகமாகவும் இடையே வந்ததுண்டு. அப்போது லட்சுமி 'சற்று என் முன் நின்று பார்த்திடுவாள்!' என்கிறார். சொற்பப் பணம் கண்டு மகிழ்ந்தவருக்கு, சற்று அதிகமாய் வரவு வந்ததும், 'அந்த மோகத்திலே தலை சுற்றிடும் காண்!' என்ற நிலைமையும் ஏற்பட்டதாம். ஆனால் பொருள் வருவாய் திடீரென்று நின்றுபோய் இவரைத் தொல்லைப் படுத்தியது.

என்ன பிழைகள் கண்டோ—அவள்
என்னைப் புறக்கணித்(து)
ஏகிடுவாள்!

என்கிறார்.

திருமகள் புறக்கணித்ததும் உள்ளக் கருத்துகள் சின்ன பின்னமாகிச் சிந்திச் சிதறிப் போய் விட்டனவாம். மனம் மிகவும் வெந்து போயிற்றாம்.

சின்னமும் பின்னமுமா—மனம்
சிந்தி உளம்மிக
நொந்திடுவேன், அம்மா!

என்று தாயைநோக்கித் தன் நிலைமையைப் பரிதாபமாக அறிவித்துக் கொண்டார்.

பின்னர் இவர் அதிக அளவில் செல்வங்களைப் பார்த்ததில்லையா? 'பார்த்திருக்கிறேன்; அபரிமிதமாய்ப் பார்த்திருக்கிறேன்; மட்டுப் படாது கொட்டிக் கிடக்கும் செல்வங்களையும் பார்த்திருக்கிறேன்" என்று பாடியிருக்கிறார்.

லட்சுமியையும் இவளுடைய செல்வங்களையும் பார்த்ததாக உறுதி கூறுகிறார்.

காட்டு வழிகளிலே—மலைக்
காட்சியிலே, புனல்
வீழ்ச்சியிலே!

காட்டுப்புறங்களில் லட்சுமியைக் கண்டதுபோல் நாட்டுப்புறங்களின் இயற்கை யழகுகளிலும் லட்சுமியைக் கண்டாராம். நகரங்களின் செயற்கையழகுகளிலும் கண்டாராம். 'கண்ட விந்தையிலே

இன்பம் மேற்கொண்டு போம், அம்மா!' என்று கள்ளங்கவடற்ற குழந்தையுள்ளத்துடன் கவிஞர் தாம் இன்புற்றதைப் பரவசமாய்ப் பாடுகிறார்.

இத்தகைய கலைஞர்—உண்மையான லட்சுமி பக்தர்—வறுமைத் துன்பத்திலே மூழ்கிப்போய் விட்டார் என்று கருதுவது பொருந்தாது. இயற்கையழகுகளிலும் செயற்கையழகுகளிலும் தன் பெருஞ்செல்வத்தை இவருக்குப் புலப்படுத்திய திருமாமகள் இவர் உள்ளத்திலிருந்து பொங்கி வந்த கவிதையில் நிகரிலாப் பெருஞ்செல்வத்தையும் காட்டி விட்டாள்.

லட்சுமிதேவி தன்னை லட்சுமிதேவியாக இவருக்குப் புலப்படுத்தியதைக் காட்டிலும் தன்னை ஆதிபராசக்தியாகப் புலப்படுத்தினாள் என்று கூறவேண்டும். சோலைகளிலும் நிலவிலும் இவர் கண்ட பெண்மை யுருவம் திருமகள் என்றால், இரவிலே இருட்டிலே வந்த பெண்மையழகு காளியாகப் பராசக்தியாகத் தமக்குப் பேரருள் புரிந்தது என்று பாடியிருக்கிறார்.

லட்சுமியின் அருளால் இவருக்குக் கிடைத்த செல்வத்தைக் காட்டிலும் பராசக்தியின் அருளால் கிடைத்த செல்வம் பெரிது என்றே கருதுகிறார். கலைமகளால் கிடைத்த அறிவைக் காட்டிலும் பராசக்தியால் தமக்குக் கிடைத்த அறிவே நல்ல தெளிந்த அறிவு என்கிறார்.

செல்வங்கள் பொங்கிவரும்;—நல்ல
தெள்ளறி(வு) எய்தி
நலம்பல சார்ந்திடும்

பராசக்தியின் திருவருளால்—என்று இவர் பாடியிருப்பதால், பாரதியாருக்கு லட்சுமி பக்தியைக் காட்டிலும் பராசக்தி பக்தியே அதிகம் என்பது வெளிப்படை.

லட்சுமியைச் சரணமடைவதற்குக் காலமும் கணக்கும் இல்லை, விரும்பியபோது சரணமடையலாம் என்பதே பாரதியாரின் தேர்ந்த கொள்கை. எனினும் நவராத்திரி போன்ற விசேஷ தினங்களில் பார்வதியையும் சரஸ்வதியையும் லட்சுமியையும், மூன்றும் ஒன்றாகிய பராசக்தி மாதாவையும் சரணமடைவது நலம் என்று பலரும் நம்புகிறார்கள். இந்த நம்பிக்கைக்கு இணங்கப் பாரதியாரும் நவராத்திரிப் பாட்டு என்று நாலு பாடல்கள் பாடி யிருக்கிறார்.

பராசக்தியைப் பணிந்து பாடிவிட்டு, கலைத் தெய்வமாகிய சரஸ்வதியையும் பாடிவிட்டு, ஸ்ரீதேவி என்ற லட்சுமியையும் பாடுகிறார்:

பொன்னரசி, நாரணனுர்
தேவி, புகழரசி,
மின்னுநவ ரத்நினம்போல்
மேனி அழகுடையாள்,
அன்னையவள் வையமெலாம்
ஆதரிப்பாள், ஸ்ரீதேவி
தன்னிருபொற் ருளே
சரண்புகுந்து வாழ்வோமே.

சாதாரண மக்களும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய வாக்கு இது. எல்லாருக்கும் ஆழ்ந்த பொருளை வெள்ளைச் சொற்களால் உணர்த்தக் கூடிய பாட்டு. பொன்னிலும் நவரத்தினங்களிலும் திருமகளின் சாயையைக் கண்டு, அந்தப் பொருள்களால் மயங்கிப் போகாமல், உலக அன்னையின் திருவருளை நினைவூட்டிக் கொள்ள வேண்டும் என்ற குறிப்பை இப்பாட்டில் காணலாம். புகழால் மயங்காது அதிலும் அதிதேவதையான திருமகளைக் கண்டு சரண் புகுந்து வாழ வேண்டும் என்ற குறிப்பையும் இப்பாட்டிலே கண்டு கொள்ளலாம்.

இப்பாட்டை நவராத்திரி காலத்தில்தான் பாடவேண்டு மென்பதில்லை. உண்மையான லட்சுமி பக்தர்களுக்கும் பராசக்தி பக்தர்களுக்கும் எந்த வேளையும் நவராத்திரிதான்! லட்சுமி யைச் சரணமடைந்து வாழ வேண்டும் என்ற விருப்பமே முக்கியமானது.

குழந்தை விளையாடிக் கொண்டிருக்கிறது. பொம்மைகளோடு கொஞ்சி விளையாடுகிறது. சிரித்து விளையாடுகிறது. கைகளையும் கால்களையும் ஆட்டி விளையாடிக் கொண்டிருக்கிறது. அப்போது தாய் தனக்குரிய வேறு வேலைகளைப் பார்த்துக் கொண்டிருக் கிருள்.

திடீரென்று குழந்தை அழுகிறது. பசித்து அழுகிறது, அல்லது தாயைப் பார்க்க வேண்டுமென்று அழுகிறது. தாய் வேறு பொம்மை களைக் கொடுத்துப் பார்க்கிருள். குழந்தை அழுதுகொண்டே யிருக்கிறது. பசி வந்துவிட்டது என்று தெரிந்து பால் ஊட்டுகிருள். குழந்தையின் தந்தையோ, அண்ணனோ, அக்காளோ, வேறு உறவினரோ சமாதானப்படுத்த முடியவில்லை என்ற நிலையில் தாய் குழந்தையை மடியில் எடுத்து வைத்துக் கொள்ளுகிருள். இடுப்பில் வைத்துக் கொள்ளுகிருள். அன்போடு அணைத்துக் கொள்ளுகிருள். மகாலட்சுமியின் தாயன்பு சாதாரணத் தாயன்பிற்கும் எவ்வளவோ மேலானது.

'அழுத குழந்தை பால் குடிக்கும்' என்பர். மனம் உருகி அழுது முறையிட்டுச் சரணம் அடைகின்ற மக்களுக்கு மகாலட்சுமி அருள் புரிவது திண்ணம்.

திருவைப் பணிந்து நித்தம்
செம்மைத் தொழில் புரிந்து,
வருக வருகவென்றே—கிளியே!
மகிழ்வுற்(று) இருப்போமடி!

(பாரதியார் - கிளிப்பாட்டு)

---


KOVILOOR ANDAVAR
A. No. 18556
LIBRARY, KOVILOOR

எமது 30 காசு

## சமய நூல்களில் இவைகளையும் படிக்கலாம்!

1. நவராத்திரின் கதைகள் (பி ஸ்ரீ)
2. விழா, விரதம், பண்டிகை (பி. ஸ்ரீ.)
3. திருக்குற்ருலம் (பி. ஸ்ரீ.)
4. கண்ணன் பிறந்தான் (பி. ஸ்ரீ.)
5. பிள்ளையார் (பி. ஸ்ரீ.)
6. மங்களவல்லி (ரசபதி அடிகள்)
7. நாயன்மார் கதை I (கி. வா. ஜ.)

உங்கள் பிரதிகளுக்கு இன்றே உங்கள் ஏஜெண்டுகளிடம் ஆர்டர் செய்துவிடுங்கள்!



அமுத நிலையம்

91, மௌண்ட் ரோடு,

தேனாம்பேட்டை, சென்னை-18